# வரகூர் ஸ்தல வரலாறு
# மற்றும்
# ஸ்ரீ நாராயண தீர்த்தர் சரித்திரம்



# வரகூர் ஸ்தல வரலாறு

*மற்றும்*

# ஸ்ரீ நாராயண தீர்த்தர் சரித்திரம்

31-2






தொகுத்து அளித்தவர்கள்
**வரகூர் V.K. வெங்கடராமன்**
**&**
**வரகூர் வை. கிருஷ்ணமூர்த்தி**

Phone; 4423521

V, KRISHNAMURTHY
No:1, 9th Cross Street
INDIRA NAGAR
MADRAS-600 020

*வெளியிட்டோர்*
*பரம்பரை அறங்காவலர்கள்*
**ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயில்**
**ஸ்ரீ மஹா கைலாசநாதர் கோயில்**
**வரகூர்**

Email : skmkanchi@md3.vsnl.in
kanchimutt@vsnl.com
www.kamakoti.org.

Phone : (04112) - 222115
Fax : (04112) - 224305

31-2

உ

Sri Chandramoulesswaraya Namaha

Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL**
**SRIMATAM SAMSTHANAM**

**No.1, Salai Street, KANCHIPURAM - 631 502. Tamilnadu, India**

31-7-2003

Mudra

திருக்கோயில்கள் நிறைந்தது நம் தமிழ்நாடு. சைவம், வைணவம் ஆகிய இருபெரும் சமயங்களை பின்பற்றும் அடியார்கள் இக்கோயில்களை எழுப்பியுள்ளனர். இத்திருக்கோயில்கள் அடியார்கள் வழிபடும் இடமாகவும் சமுதாயத்திற்கு பயன்படும் இடமாகவும் உள்ளன. தஞ்சை ஜில்லாவில் குடமுருட்டி தென் ஆற்றங்கரையில் உள்ள வராஹபுரி என்ற பெயர்பெற்ற **வரகூர் கிராமத்தில்** எழுந்தருளி அருள்பாலித்து வரும் **ஸ்ரீ வேங்கடேச பெருமாள், ஸ்ரீ மஹா கைலாச நாதர் கோயில்கள்** மிகபிரசித்தி பெற்றவை. இந்த கோயில்கள் சுமார் ஆயிரம் ஆண்டு சரித்திர வரலாறு பெற்றவை. இந்த ஊருக்கும் கோயிலுக்கும் மேலும் பெருமை சேர்த்தவர் புகழ்பெற்ற ***'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி'*** என்னும் காவியத்தை இயற்றி ஜீவ ஸமாதி அடைந்த ***ஸ்ரீ நாராயண தீர்த்தர்*** என்ற மஹான்.

வரகூர் **V.K.** ***வெங்கடராமன்,*** பரம்பரை கோவில் தர்மகர்த்தா, மற்றும் வரகூர் ***வை. கிருஷ்ணமூர்த்தி*** பல பெரியோர்களை சந்தித்து பல வரலாற்று நூல்களை படித்து ***"வரகூர் ஸ்தல வரலாறும், ஸ்ரீ நாராயண தீர்த்தர் சரித்திரமும்"*** என்னும் நூல் எழுதி வெளியிட இருப்பது கேட்டு சந்தோஷிக்கிறோம். இது பயண, வரலாற்று, வழிகாட்டி நூல். எல்லா சிறப்பு அம்சங்களையும் ஒருங்கே கொண்ட நூல்.

ஆன்மீகத்திலும் திருகோயில்களுக்குச் சென்று வரலாற்று விபரங்கள் தெரிந்துகொள்வதிலும் ஈடுபாடுகொண்ட அன்பர்கள் இந்நூலை படித்து பயன்பெற ***ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரரை*** ப்ரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

*- நாராயண ஸ்ம்ருதி -*

# த்யான ஸ்லோகங்கள்



ஹிமகிரிதனயாபத்யம்
ஹேமாசல சாபஸமுதிதம் தேஜ:
கிமபூ மஹத்தமமாத்யம்
ஸ்மர்த்தவ்யம் விக்ன திமிரஹரணாய



கிரிராஜஸுதாஸுனு:
கரிராஜவரானை:
பரிபந்தி கணத்வம்ஸீ
ஸீரஸேவ்யோ விராஜதே



ஸ்ரீ தப்தகாஞ்சன நிபவஸனலங்க்ருத திவ்யகாத்ரம்
ம்ருகமதகஸ்தூரீதிலகாஞ்சிதவிசாலபாலம்
பூலோகவைகுண்டவராஹபுரீச ஸ்ரீவாஸுதேவம்
கிரிவரவேங்கடரமணம் பாவயாம்யந்தரங்கே



அபார கருணா ஸிந்தும் ஞானதம் சாந்தரூபிணம்
ஸ்ரீ சந்திரசேகர குரும் ப்ரணமாமி முதாந்வஹம்
ததந்தே வாஸ வர்யஞ்ச ஜீவோத்தாரண தத்பரம்
ஸ்ரீ ஜயேந்திரகுரும் பூஜ்யம் ப்ரணமாமி முதாந்வஹம்
சதுர்தச வய! ப்ராப்த ஸன்யாஸம் ஸுமஹாமதிம்
நமாமி சங்கராரம்பம் விஜயேந்திர ஸரஸ்வதீம்

## விளக்கஉரை

ஸேவார்த்திகள், வரகூர் கிராம மக்களின் வெளியூர்வாசிகள் இவர்கள் வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாளின் மஹிமையை பிறர் அறியும்படி செய்தவரும் தன் வாழ்நாளின் பிற்பகுதியை வரகூரிலேயே கழித்து ஸ்ரீ வேங்கடேச பெருமாளையே கண்ணனாக பாவித்து அவருடைய ஆக்ஞையின்பேரில் அவருடைய ஒப்புதலுடன் *"ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி"* என்ற சுத்த சமஸ்கிருத காவியத்தை இயற்றியவருமான *ஸ்ரீ நாராயண தீர்த்தர்* என்ற *யதீந்திரரைப்* பற்றியும், வேத உபநிஷத்துக்களில் கூறப்பட்ட ஆத்ம தத்துவங்களை உள்ளமைத்து அவர் வகுத்து கொடுத்த உறியடி உத்ஸவத்தை பற்றியும், பல நூற்றாண்டுகளாக ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயிலின் வழிபாட்டில் கடைப்பிடித்து வரும் பழக்க வழக்கங்கள் மற்றும் சம்பிரதாயங்களை பற்றியும், இப்போதுள்ள வரகூர் பக்தர்கள், அவர்களது சந்ததியினர் அறிந்துகொண்டு குலதெய்வ வழிபாட்டை தொடர்ந்து நடத்தும் வகையில் ஒரு புத்தகத்தை இக்கோயிலின் நிர்வாகிகளான பரம்பரை அறங்காவலர்கள் வெளியிட வேண்டும் என்று விரும்பினார்.

இவ்வருடம் ஏப்ரல் மாதம் 19-ஆம் தேதி நடந்த வரகூர் கிராம மக்களின் பொதுக்கூட்டத்தில் இவ்விஷயங்கள் விவாதிக்கப்பட்டு இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

முதல் தீர்மானத்தில் மேற்கூறிய விபரங்களை குறித்து ஒரு புத்தகம் வெளியிடலாம் எனவும், இரண்டாவது தீர்மானத்தில் வரகூரிலேயே மறைந்த ஸ்ரீ நாராயண தீர்த்தருக்கு நினைவு அஞ்சலியாக ஒரு மண்டபம் கட்டி அவரது, ஆராதனை தினத்தை தற்போது கொண்டாடி வருவதை காட்டிலும் இன்னும் சிறப்பாக அவரால் பாடப்பட்ட "ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியை" எல்லோரும் அறியும் வகையில் ஓர் சங்கீத உத்ஸவமாக கொண்டாடலாம் எனவும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் வரகூரிலேயே முக்தி அடைந்த "ஸ்ரீ நாராயண தீர்த்தரின்" அதிஷ்டானம் அப்போதே மறைந்துவிட்டது எனவும் அவர் சுக்ல துவாதசியிலதான் ஸித்தியடைந்தார் என்றும் வரகூரில் வாழ்ந்த பெரியோர்களிடமிருந்து கிடைத்த 'கர்ண பரம்பரை' செய்திகளாகும்.

வரகூர் உறியடி உத்ஸவத்தைப் பற்றியும் ஸ்ரீ நாராயண தீர்த்தரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றியும் பல கட்டுரைகள், பல எழுத்தாளர்களால் புத்தக வடிவமாகவும் பத்திரிகைகளிலும் வெளிவந்துள்ளன. அவ்வாறு வெளிவந்த விஷயங்களையும், மற்றும் கிராமத்து பெரியோர்களிடமிருந்து கேட்டறிந்த விபரங்களையும் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயிலின் பரம்பரை டிரஸ்டிகளில் ஒருவரான திரு V.K. *வெங்கட்ராமன்* அவர்களுக்கும் வரகூரில் நடைபெறும் வழிபாட்டில் உள்ள சம்பிரதாயங்களை நேரில் அறிந்தவரும், சென்னையில் வசிக்கும் வரகூர் திரு V. *கிருஷ்ணமூர்த்தி* அவர்களுக்கும் பரம்பரை அறங்காவலர்கள் தங்கள் நன்றியை தெரிவிப்பதுடன் ஸ்ரீ V. *கிருஷ்ணமூர்த்தி* அவர்களையே இப்புத்தகத்தை இரண்டு பகுதிகளாக பிரித்து ஸேவார்த்திகளின் உதவிகொண்டு புத்தகமாக வெளியிடலாம் என்றும் அவருக்கு அனுமதி வழங்கப்பட்டது.

இப்புத்தகத்தின் முதல் பகுதியில் "வரகூர் ஸ்தல வரலாறு - கோயில் அமைப்பு - உறியடி உத்ஸவம் - அதன் சம்பிரதாயங்கள் - மற்றும் ஸ்வாமி புறப்பாடு சம்பிரதாயங்கள்'' விரிவாக விளக்கப்படடுள்ளன. சுமார் 70 ஆண்டுகளுக்கு முன் வரகூரில் வாழ்ந்து மறைந்த *'ஸ்ரீநாராயண கவி'* என்பவர் உறியடி உத்ஸவத்தை *"ஸ்ரீ கிருஷ்ண சிக்யோத்ஸவ பிரபந்தம்"* என்ற தலைப்பில் *சம்பு காவியமாய் சமஸ்கிருதத்தில் வசனங்களாகவும், செய்யுள்களாகவும்* பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாவது பகுதியில் 'ஸ்ரீ நாராயண தீர்த்தர்' வாழ்க்கை வரலாறு விஸ்தாரமாக எழுதப்பட்டுள்ளது. சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் *"ஸ்ரீ பரணீதரன்"* என்ற ஆனந்தவிகடன் கட்டுரையாளர் தென்நாட்டின் பல சிறப்புவாய்ந்த சிறியதும், பெரியதுமான திவ்ய க்ஷேத்திரங்களை பார்வையிட்டு கட்டுரைகளாக ஆனந்தவிகடன் வாரப்பதிப்பில் எழுதியுள்ளார். கண்டியூருக்கும் வரகூருக்கும் இடையேயுள்ள திருப்பந்துருத்தியில் உள்ள *"தீர்த்த நாராயணர் ஸமாதி"* ஸ்தலத்தை பார்வையிட்டபின், ஸ்ரீ தீர்த்த நாராயணர் ஸமாதி எவ்வாறு ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஸமாதியாக கருதப்பட்டு முன்னவர் ஸமாதி தினத்தில் (மாசி மாதம் சுக்லாஷ்டமி) பின்னவரின் ஸமாதி தினமாக சங்கீத உத்ஸவமாக எவ்வாறு கொண்டாடப்படுகிறது என்பதை யாராவது ஆராய்ந்து பெயர் குழப்பத்தை சந்தேகத்திற்கு இடமின்றி தெளிவாக்கப்படவேண்டும்.

என்ற அபிப்ராயத்தை எழுதியிருந்தார். இப்புத்தகத்தின் தொகுப்பு ஆசிரியரில் ஒருவரான வரகூர் ஸ்ரீ V. *கிருஷ்ணமூர்த்தி* இவ்விஷயத்தைப் பற்றி பலருடன் தொடர்புகொண்டு பல விஷயங்களை ஆதாரங்களுடன் சேகரித்து திருப்பந்துருத்தியில் ஜீவ ஸமாதி ஆலயத்தில் வழிபட்டுவருபவர் "ஸ்ரீ தீர்த்த நாராயணர்" தான் என்றும் அவருக்கு சில வருடங்களுக்கு முன் வரகூரில் முக்தியடைந்த "ஸ்ரீ நாராயண தீர்த்தரின்" ஸமாதி அல்ல என்றும் சந்தேகத்திற்கு இடமில்லாமல் கூறியுள்ளார்.

இப்புத்தகத்தை படிக்கும் எல்லா பக்தர்களும், ஸேவார்த்திகளும் தங்களை ஸ்ரீ வேங்கடேச பெருமாளின் சேவைகளுக்கு அர்ப்பணித்து கொண்டால் அதுவே இப்புத்தக வெளியீட்டின் பெரிய பலனாக கருதப்படும்.

உலக மகாஜனங்கள் எல்லோரும் நோயின்றி சுகமான வாழ்க்கை நடத்த எல்லாம் வல்ல "ஸ்ரீவேங்கடேச பெருமாள் அருள்புரிய" வேண்டுகிறோம்.

இங்ஙனம்
பரம்பரை அறங்காவலர்கள்
ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயில்,
ஸ்ரீ மஹா கைலாசநாதர் கோயில்

வரகூர்
27-7-03

# முன்னுரை / நன்றியுரை

தஞ்சை மாவட்டத்தில் ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் பழமைவாய்ந்ததும் **"பூபதிராஜபுரம்"** என்ற புராதான பெயர் கொண்டதும் **"பூலோக வைகுண்டம்"** என்றும் போற்றப்பட்டு வருகின்ற கிராமம் **வரகூர் கிராமமாகும்.** தென்வடலான வீதியில் இருபுறமும் வீடுகளுடன் கூடிய அக்ரஹாரத்தின் ஆரம்பத்தில் *கடுங்கலாறு* என்ற சிற்றாறும், அதன் அருகிலேயே **பிள்ளையார் கோவிலும்,** கோவிலுக்கு பக்கத்தில் *பெரிய குளமும்* அதை அடுத்து **ஸ்ரீ மஹா கைலாசநாதர் ஆலயமும்,** அதைத் தொடர்ந்து வீடுகளுள்ள வீதியின் நடுமையத்தில் **ஸ்ரீ வேங்கடேச பெருமாள் ஆலயமும்,** வரகூரின் எல்லை தேவதைகளான **ஐயனார், பெரமனார் கோவில்களும்** மற்றும் நீர் நிலவளங்களுடன் சூழப்பட்டு அழகிய கிராமமாக காட்சியளிப்பதுதான் **வரகூர்** கிராமமாகும்.

வீரநாராயணன் என்றும் அழைக்கப்பட்ட பராந்தக சோழ மன்னரால் நிர்மாணிக்கப்பட்டு வழிபடப்பெற்றதாக சரித்திர ஆய்வாளர்களால் கூறும் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணர், வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் கோயிலிலுள்ள மூலவர் ஆகும். இக்கோயிலினுள் உறைந்துள்ள மூலவரும், உத்ஸவரும், சிற்ப முறைப்படி, சோழர் காலத்து திருவுருவங்களாக கருதப்படுகிறது.

மேலே குறிப்பிட்டுள்ள பெருமைக்குரிய கிராமத்தில் பல பெரியோர்கள், *சம்ஸ்க்ருதம், வேதம், சாஸ்த்ரம், புராணம்* போன்ற ஆன்மீகத்துறையில் விற்பன்னர்களாகவும், பக்தி மார்க்கத்தில் சிறந்த பாகவதர்களாகவும், சங்கீதம், நாட்டியம் போன்ற கலைகளில் சிறந்த கலைஞர்களாகவும் அக்காலத்து அரசவையில் கௌரவிக்கப்பட்ட பண்டிதர்களாவும் கலை வல்லுனர்களாகவும், அதிகாரிகளாகவும் பணிபுரிந்துள்ளனர். வரகூர் ஸ்வாமிகள் என்று அழைக்கப்படும் அச்யுத கிருஷ்ண ஸரஸ்வதி போன்ற சன்யாசிகளும் வாழ்ந்திருந்தனர்.

*வரகூரின் வரலாறு, ஸ்ரீ வேங்கடேச பெருமாளின் மஹிமை, உறியடி உத்ஸவத்தின் சிறப்பு, இவைகளைப் பற்றி பல கட்டுரையாளர்கள் எழுதியுள்ளனர்.*

வரகூரைச் சாந்த பல குடும்பங்களின் வாரிசுகள் இந்தியாவின் பல மாநிலங்களில் மட்டுமல்லாமல் உலகின் பல பாகங்களிலும் பணி நிமித்தமாய் வாழ்ந்து வருகின்றனர். இவர்களும் மற்றும் இவர்களது சந்ததியினரும் இக்கோயில்களின் சிறப்பு அம்சங்களைத் தெரிந்துகொள்ளும் வகையில் இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.

பண்டைய காலத்திலிருந்து இன்றுவரை வரகூர் வாசிகள் ஸ்ரீ வேங்கடேச பெருமாளை குல தெய்வமாக வழிபட்டு வருவதுடன், அத் தெய்வத்திற்கு செய்யும் சேவையையே தங்கள் பிறவிப்பயனாக கருதி, உலகில் எங்கிருந்தாலும் அவரவர்கள் குடும்பத்தினர் செலுத்திவந்த நேர்த்திக்கடனை விடாது தொடர்ந்து இன்றும் செய்து வருவது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக குழந்தைகளுக்கு முடி காணிக்கை செலுத்துவது உத்ஸவங்களில் பரம்பரை பாக்யமாக கருதி தவறாமல் பணி செய்தல், மண்டகப்படிகளை தொடர்ந்து செய்தல் முதலியவை சிறப்பு அம்சங்களாகும்.

வரகூருக்கு ஆந்திர தேசத்திலிருந்து வந்து பெருமாளை வழிபட்டு, பேறு பெற்றவர் **ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள்** ஆவார். அம்மஹானின் விஜயத்திற்குப் பிறகு **"பூபதிராஜபுரம்" "வராஹபுரி"** என்று மாறி தற்போது **வரகூர்** என்று அழைக்கப்படுகிறது. இம்மஹானின் வரகூர் விஜயத்தின் வரலாறு இப்புத்தகத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

வரகூர் ஸ்தல வரலாறு புத்தகத்தை அச்சிட்டு வெளியிட ஆலோசனை கூறியதோடு, அதற்கான குறிப்புகள், கட்டுரைகளை சேகரித்தும், பலரிடமிருந்து விவரங்களை சேகரித்தும் விடா முயற்சியுடன் தன்னலமற்ற சேவைபுரிந்து தற்போது சென்னையில் வசித்துவரும் **வரகூர் திரு வை. கிருஷ்ணமூர்த்தி** அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலையும், அறங்காவலர் குழுவின் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகம் வெளியிடுவதற்கு உதவியுள்ள எல்லோருக்கும் எங்களது மனமார்ந்த பாராட்டையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு வை. கிருஷ்ணமூர்த்தி தான் சேகரித்துள்ள குறிப்புகளை என்னுடன் பகிர்ந்துகொண்டு வரகூர் ஸ்தல வரலாற்றுப் பகுதியில், வரகூர் ஆலயங்களின், நிர்வாகம், சம்பிரதாயங்கள், உத்ஸவமுறைகள் இவைகளைப் பற்றி மேலும் பல விஷயங்களை என் சக அறங்காவலர்களிடமும், ஊரிலுள்ள விஷயமறிந்த பெரியோர்களிடமும் கேட்டுத் தெரிந்துகொண்டு தொகுத்துகொடுக்க வேண்டியதின் பேரில் நான் அப்பணியை செய்துள்ளேன்.

ஸ்ரீ நாராயண தீர்த்தரின் வரகூர் விஜயத்தைப் பற்றிய குறிப்புகளை திரு **வை. கிருஷ்ணமூர்த்தி** அவர்கள் தொகுத்துக் கொடுத்துள்ளார்.

வரகூர் ஆலயங்களின் பரம்பரை அறங்காவலர் குழு அங்கத்தினர்களான *திரு* **V.** ***நாராயணசாமி,*** *திரு* **R.** ***நாராயணன்,*** *திரு* **V.N.** ***கோபாலன்,*** *திரு* **V.S.** ***கணேசன்*** ஆகியோர் இப்புத்தக வெளியீட்டிற்கு சிறந்த ஒத்துழைப்பு புரிந்துள்ளதற்காகவும், ஆலய அலுவலக ஊழியர்களான *திரு* **V.S.** ***இராமநாதன்,*** *திரு* **V.B.** ***கார்த்தியேன்*** *திரு* **B.** ***பாலாஜீ*** இவர்கள் அச்சுப்பிழை திருத்தலில் உதவியதற்காகவும் நன்றிகூற கடமைப்பட்டுள்ளேன். மேலும் இப்புத்தகத்தை வெளியிடுவதற்கு பண உதவி, பொருளுதவி மற்றும் கைங்கர்யம் செய்துள்ள கீழ்க்கண்டவர்களுக்கும் எனது மனார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

1. M/s. SESHASAYEE PAPER & BOARDS LTD., ERODE. (புத்தகம் அச்சிட தேவையான காகிதத்தை நன்கொடையாக அளித்துள்ளார்கள்)

2. திரு **R. வெங்கட்ராமன்,** ஆடிட்டர், சென்னை (அச்சிட தேவையான காகிதம் நன்கொடையாக கிடைக்க பரிந்துரை செய்துள்ளார்கள்)

3. திரு **V.R. ஸ்ரீநிவாசன்,** மாருதி நகர், பெங்களூர். (இப்புத்தகம் வெளியீட்டிற்காக ரூ.10,000/- நன்கொடை அளித்துள்ளார்)

4. திரு **S. சேதுராமன்,** ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரிண்டிங் ஒர்க்ஸ், கும்பகோணம். (புத்தகம் அச்சிட ஆகும் செலவுத் தொகையை ஏற்றுள்ளார்)

*இப்புத்தகத்தில் காணப்படும் செய்திகள் பின் வரும் குறிப்புகளிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன. இக்குறிப்பு ஆசிரியர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறனே.*

1. **Dr. R.** ***நாகசாமி*** - ஒய்வுபெற்ற டைரக்டர், தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வு கழகம்
2. *திரு* ***பரணீதரன்*** ஆசிரியர் "திருத்தலப் பெருமை" பாகம் - III
3. ஆனந்தவிகடன் - தமிழ் வார இதழ்.
4. *திரு* ***சிவா*** ஆசிரியர் ***"ஏணிப்படிகளில் மாந்தர்கள்"***
5. நர்மதா பதிப்பகம்

6. திருவையாறு திரு *கணேச சிரௌதிகளின்* குடும்பத்தினரான திரு N. *ராமதுரை*

7. குன்றக்குடி திருவண்ணமாலை ஆதீனகர்த்தர் திருவருள் திரு *பொன்னம்பல அடிகளார்*

8. குடவாயில் திரு *பாலசுப்பிரமணியன்*, ஆசிரியர் "சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும், ஓவியங்களும்"

9. தமிழ் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

10. ஸ்ரீ நாராயண தீர்த்தர் கல்வி மற்றும் அறக்கட்டளை.

இங்ஙனம்

**V.K. வெங்கட்டராமன்**

*பரம்பரை அறங்காவலர்குழுத் தலைவர்*

**ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயில்**

**ஸ்ரீ மஹா கைலாசநாத ஸ்வாமி கோயில்**

*1/83, அக்ரஹாரம்*

**வரகூர்**

# வரகூர் ஸ்தல பெருமையும், அங்கு வீற்றிருக்கும் தெய்வத்தின் மகிமையும்

தொகுத்தவர் : வரகூர் V.K. *வெங்கடராமன்*

**வரகூர் கிராமம்**

தென்னிந்தியாவின் ''நெற்களஞ்சியம்'' என்று போற்றப்பட்ட தஞ்சாவூர் ஜில்லாவில் தஞ்சாவூர் டவுனிலிருந்து மேற்கே 25 கி.மீ. தூரத்திலும், திருவையாற்றிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும் குடமுருட்டி ஆற்றங்கரையின் தென் பகுதியில் பூபதிராஜபுரம் என்ற பழமையான பெயர் கொண்ட கிராமம் தான் வராஹபுரி என்று பெயர் பெற்ற வரகூர் கிராமம் ஆகும்.

தஞ்சாவூர் அல்லது பூதலூர் ரயில் நிலையங்களில் இறங்கி டாக்ஸி, ஆட்டோ, பஸ் மூலமாக வரகூர் கிராமம் வந்தடையலாம்.

பண்டையகால அக்ரஹார அமைப்புகளின்படி கிராம எல்லை ஆரம்பத்தில் பிள்ளையார் கோயில், குளம், சிவன் கோயில், மத்தியில் பெருமாள் கோயில், கிராம எல்லை முடிவில் காவல் தெய்வங்களான அய்யனார், பெரமனார் கோயில்கள் உள்ளன.

இவ்வனைத்து கோயில்களையும் பண்டையகால முறைப்படி ஐந்து சேத்திதாரர் வம்சத்தினரைக்கொண்ட அங்கத்தினர்கள் அடங்கிய குழு இன்றும் சிறப்பாக நிர்வகித்து வருகிறது.

ஸ்ரீ வேங்கடேசபெருமாள் / ஸ்ரீ மஹா கைலாசநாத ஸ்வாமி கோயில்களின் உண்டியல்களிலிருந்தும் வைப்புத் தொகை வட்டியிலிருந்தும், காணிக்கை மற்றும் உபயவரவு மூலமும் இக்கோயிலின் நிர்வாகம் நடைபெற்று வருகிறது.

இக்கோவில்கள் நிர்வாகம் பரம்பரை அறங்காவலர் வசமும் அதற்கான கணக்கு புத்தகங்களை சரிபார்த்தல், உண்டியல்களின் திறப்பை நேரில் கண்காணித்தல், கோயிலுக்கு சொந்தமான விலை உயர்ந்த தங்க, வெள்ளி ஆபரணங்களை மதிப்பிட்டு சரிபார்த்தல் முதலியவைகளை இந்து சமய அறநிலையத்துறை அதிகாரிகள் பரம்பரை அறங்காவலர்களின் ஒத்துழைப்புடன் செய்து வருகின்றனர். இக் கோயில் உத்ஸவங்கள், மற்றும் மண்டகப்படிகள் இதற்கென்று நியமிக்கப்பட்ட வரகூர் கிராமத்து குடும்பத்தினரின் சந்ததியர்களினால் ஏற்கப்பட்டு தொடர்ச்சியாக நடைபெற்று வருகின்றன.

**வரகூர் சரித்திர வரலாறு**

17-ம் நூற்றாண்டில் பூபதிராஜபுரம் என்ற வரகூர் கிராமம் தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்கள் காலத்தில் பிரசித்தி பெற்றிருந்ததாலும் ராஜ ராஜ சோழன் காலத்தில் 11-ம் நூற்றாண்டின் முன் பகுதியில் ராஜேந்திர சிம்ம வளநாடு என்ற பெரிய பிரிவின் கீழ் இருந்த குருக்கை நாடு என்ற பகுதியில் இருந்ததாக தஞ்சாவூர் பெரிய கோவிலில் உள்ள கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளதாகவும், இந்த கிராமம் ஓர் ஆயிரம் ஆண்டு சரித்திர வரலாறு பெற்றது என்று தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுக் கழகத்தின் ஓய்வுபெற்ற டைரக்டர் டாக்டர் ஆர். நாகசாமி அவர்கள் ஹிந்து நாளேட்டில் 1999-ம் வருஷம் ஜூன் மாதம் 4-ம் தேதி வெளியான தன்னுடைய கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

1981-ம் வருஷம் நடைபெற்ற வரகூர் கோயில்களின் கும்பாபிஷேக நினைவு மலரில் வரகூர் திரு.வை.வேணுகோபாலன் எழுதிய வரகூரின் ஆதாரபூர்வமான சரித்திர வரலாறு பின்வருமாறு:

சோழ நாட்டின் தலைநகர் தஞ்சாவூர். சோழமண்டலம் என்ற பிரிவில் தஞ்சைக்கு வடமேற்கே உள்ள பகுதிக்கு ஆர்க்காட்டுக் கூற்றம் என்று பெயர் வழங்கியது. ஆர்க்காட்டுக் கூற்றத்தில் உள்ள வரகூர் புராதனமான கிராமமாகும். இவ்வூரின் பழமையான பெயர் பூபதிராஜபுரம் என்பதாகும். புரம், ஊர், என்பன பழமையான இடங்களைக் குறிப்பதாகும்.

கி.பி. 7, 8-ம் நூற்றாண்டில் கள்ளர் இனத்தவரான முத்தரையர்கள் என்பார் இப்பிராந்தியத்தை ஆட்சிபுரிந்தார்கள். செந்தலை, தஞ்சை, வல்லம், நியமம் ஆகிய பகுதிகளில் முத்தரையர்கள் ஆட்சி நடைபெற்றது.

செந்தலைக்கு தெற்கே உள்ள ஊர் வரகூர். கி.பி. 9, 10-ம் நூற்றாண்டுகளில் சோழர்கள் இப்பிராந்தியத்தைக் கைப்பற்றி ஆட்சி புரிந்தார்கள். விஜயாலயசோழன், ஆதித்த சோழன், பராந்தக சோழன், கண்டராதித்த சோழன், அரிஞ்சயன், இராஜராஜன் ஆகியோர் 9-ம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்தார்கள்.

வரகூரை அடுத்து வடக்கேயுள்ள செந்தலைக்கு சந்திரலேகைச் சதுர்வேதிமங்கலம் என்றும், வரகூருக்கு மேற்கே மிக அண்மையில் உள்ள கண்டமங்கலம் என்பது கண்டராதித்த சோழ சதுர்வேதிமங்கலம் என்றும் பெயர் வழங்கப்பெற்றன.

(வரகூர்) பூபதிராஜபுரம், கண்டமங்கலம், செந்தலை ஆகிய பிராந்தியங்கள் ஆர்க்காட்டுக் கூற்றம் என்று கி.பி. 9-ம் நூற்றாண்டு முதல் வழங்கலாயிற்று என்பது சாசனம் கூறும் செய்திகள். சோழ மன்னர்கள் காலத்தில் அந்தணர்களுக்கு பிரமதேயமாக (இனுமாக) முற்றூட்டாக அளிக்கப்பெற்ற ஊர்கள் இவை.

செந்தலையைச் சார்ந்து விளங்கும் பூபதிராஜபுரம் என்ற வரகூர் வடக்கில் காவிரியையும், கடுங்கால் கிளைக் காவிரியையும் கொண்டு விளங்குகிறது. செந்தலைக் கோயில் ஸ்தல புராணத்தில், இப் பிராந்தியத்தைப் பற்றி விளக்கம் கூறப்படுகிறது.

"துவாபர யுகத்தில் 'பிரகத்கச்சம்' என்றும் கிருத யுகத்தில் 'பிரும்மவனம்' என்றும், திரேதா யுகத்தில் 'ஜம்புகாவனம்' என்றும் கலியுகத்தில் 'சந்திரலேகைச் சதுர்வேதிமங்கலம்' என்றும் பெயர் பெற்று, காவிரி, கடுங்கால் நதிகளையும், வனங்களையும் கொண்டு விளங்குவதுமான பிராந்தியமாகும்.

கண்வ முனிவர் என்பார் இப்பிராந்திய வனத்தில்தான் தவம் செய்தவர். கந்தர்வப் பெண்ணான சந்திரலேகை என்பவள், கண்வமுனிவரின் சாபத்தால் இவ்வனத்தில் மானிடப் பெண்ணாகப் பிறந்து, சிவனை வணங்கி சாப விமோசனம் பெற்றாள். இவளின் பெயரால் 'சந்திரலேகை' என்று பெயர் வழங்கியது. பின்னர் செந்தலை என்ற வழக்குச் சொல்லில் அழைக்கப்பெற்றது.

கி.பி. 871-901 வரை ஆட்சி புரிந்த ஆதித்த சோழன், காவிரிக் கரைப் பகுதி எங்கும் இருபுறமும் இருநூற்றுக்கு மேற்பட்ட கோயில்களை எழுப்பினவன். இம்மன்னன் வைதீக மார்க்கத்தை நிலை நிறுத்தியவன். அந்தணர்களையும், வேதங்களையும் பாதுகாத்தவன். இம்மன்னன் காலத்தில் வரகூர் பிராந்தியத்துக்கு 'ஆதித்தவதி' என்று பெயர் விளங்கியது என்று செந்தலைக் கல்வெட்டு கூறுகிறது. (S.R.B. செந்தலை பக். II & III) இந்தப் பிராந்திய மக்களுக்கு, மகாபாரதம் வாசித்து தினந்தோறும் உபதேசம் செய்த, சிங்கி நந்தீசுவரபட்டனுக்கு இறையிலி வழங்கப்பெற்றது குறிப்பிடத்தக்கது. (S.R.B. Page III) சோழர் ஆட்சியில், வரகூரில் அந்தணர்களும், படை வீரர்களும் அதிகாரிகளுமான கள்ளர் சமூகத்தினரும் வாழ்ந்தார்கள்.

ஆதித்த சோழனுக்குப் பின்னர், பராந்தக சோழன் காலத்தில், வரகூரில் அம்மன்னனால் பெரிய ஏரி ஒன்று வெட்டப்பட்டது. அந்த ஏரியின் பெயர் வீரசிகாமணி ஏரி. இந்த ஏரி வரகூர் கிராமத்தில்

உள்ளதாயிருந்த ஏரி உள்வாய் பகுதியாகும். இப்போது இவ் ஏரிப்பகுதிகள் நஞ்சை நிலங்களாக இருந்தாலும் 'ஏரி உள்வாய்' என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

பராந்தக சோழன் இந்த ஏரியை பாதுகாக்கவும், திருத்தம் செய்யவும் கனகஸேனம் என்பவனுக்கு மானியம் கொடுத்திருந்ததைக் கல்வெட்டு கூறுகிறது. (S.R.B. Page V)

வரகூருக்கு மிக அருகில் ஒடும் காவிரிக் கிளை நதியான 'கடுங்கால்' ஆற்றைப் பராந்தக சோழன் வெட்டினான் என்ற விவரமும் கல்வெட்டு கூறுகின்றது. (A.R.No. 14 of 1899)

'வரகூர் நாடு; வரகூர் சீமை' என்றும் சோழ ராஜேந்திர சிம்ம வளநாட்டு, குறுக்கை நாட்டு வரகூர்' என்றும் (Ins 70-ல் 80-வது வரியில்) உள்ளது.

பூபதிராஜபுரம் என்ற வரகூரில் கோயில் கொண்டுள்ள மூலவர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணர் (ஸ்ரீநிவாஸப் பெருமாள்) ஸ்ரீ லக்ஷ்மி தேவியைத் தம் இடது தொடைப் பகுதியில் அமர்த்தி, அணைத்துக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றனர். உத்ஸவ மூர்த்தி ஸ்ரீ பூதேவி ஸ்ரீதேவியுடன் விளங்குகின்றார். மூலவரும் உத்ஸவரும் சிற்பமுறைப்படி, சோழர் காலத்து திருவுருவங்களாகும்.

பராந்தக சோழனுக்கு வீரநாராயணன் என்ற பெயரும் உள்ளது. பராந்தக சோழனால் நிர்மாணிக்கப்பெற்று வழிபடப் பெற்ற பெருமான் வரகூர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணர் என்று கருத முடிகிறது.

வரகூர் ஏரியும், கடுங்கால் ஆறும் அம்மன்னனால் உண்டாக்கப் பெற்றவை என்பதும் குறிப்பிடத்தக்கது. சோழர் காலத்தில் கருவறை பீடம் கருங்கல்லாலும் சுவர்கள் செங்கற்களாலும் கட்டப்பட்டவை.

இத்தகைய பெருமைக்குரிய தலத்திற்கு, ஆந்திர தேசத்திலிருந்து வந்து பெருமாளை வழிபட்டுப் பேறு பெற்றவர் ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் ஆவார். கண்ணபிரானின் அருள் விளையாட்டில், உள்ளத்தை பறிகொடுத்த ஸ்ரீ நாராயண தீர்த்தர், 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' என்ற அரிய அபிநய கிரந்தத்தை, வரகூர் கோயிலின் திருச்சந்நிதியிலேயே இயற்றினார். கண்ணபிரானின் திவ்ய காட்சிகளை மனத்திரையில் காணுற்று அவர் அந்நூலைப் பாடியுள்ளார்.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஆந்திர பிராந்தியத்தில் 'கூச்சிபுடி' என்ற குசலவபுரியில் "பாகவதமேளா" என்ற நாட்டிய நாடக மரபை, பக்தி மார்க்கத்திற்கு உரிய முறையில் ஏற்படுத்தி, பின்னர் 500 அந்தண குடும்பங்களுடன் தஞ்சையை அடுத்த மிலட்டூர் என்ற கிராமத்தில் வந்து தங்கியிருந்தார். 500 குடும்பத்தினரும் பக்தி மார்க்கத்தைப் பாகவதமேளா மரபு என்ற முறையில் நடத்திய இசை நாட்டிய நாடக விற்பன்னர்களாவர்.

கி.பி. 1590-ல் தஞ்சையை ஆட்சி புரிந்த அச்சுதப்ப நாயக்கர் அந்த அந்தண குடும்பத்தினர்களை ஆதரித்தார். கி.பி. 1610-1630 வரை ஆட்சிபுரிந்த அவர் புதல்வர் ரகுநாத நாயக்கரும் அவர்களை ஆதரித்து பாகவதமேளா மரபை பாதுகாத்தார். ஸ்ரீ நாராயண தீர்த்தரும் தஞ்சை நாயக்க மன்னர்களால் பெரிதும் ஆதரிக்கப் பெற்று மிலட்டூரில் தங்கியிருந்தார்.

அச்சுதப்ப நாயக்கர் பெயரால் வரி நீக்கிய கிராமமாக மிலட்டூர் பாகவத மேளா இசை விற்பன்னர்களுக்கு அளிக்கப் பெற்றதால் மிலட்டூருக்கு 'அச்சுதபுரம்' என்ற பெயரும் உள்ளது.

மிலட்டூர் என்ற அச்சுதபுரத்திலிருந்து ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் ஸ்தல யாத்திரையாகப் புறப்பட்டு, காவிரிஆற்றின் கிளையான குடமுருட்டி ஆற்றின் தென்கரையாக வரும்பொழுது நடுக்காவேரி என்ற இடத்தில் உள்ள பிள்ளையார் கோவிலில் இரவு தங்கினார். அம்மகானுக்கு குன்ம ரோகம் (வயிற்று வலி) பீடித்திருந்தது. அவருக்கு கனவில் ஓர் அந்தணக் கிழவர் தோன்றி ஏ தீர்த்தா காலையில் நீ விழித்த உடன் உன்முன் தோன்றும் விலங்கினை தொடர்ந்து செல். அது மறைந்த இடத்தில் தங்கி கண்ணனை பூஜிப்பாயாக. உன் தீராத வயிற்று வலி நீங்கி விடும் " என்று கூறி மறைந்தார்.

அதிகாலையில் விழித்த உடன் இரவில் கனவில் கண்டபடி தன் முன்னே காணப்பட்ட வெண்ணிற வராஹத்தை(பன்றியை) ஸ்ரீ நாராயண தீர்த்தர் பின்தொடர்ந்து சென்றார். வராஹம் நடுக்காவேரிக்கு 5 கி.மீ.தூரத்தில் மேற்கே உள்ள வரகூர் வந்தடைந்து அக்ரஹாரத்தின் மத்தியில் உள்ள ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் கோயிலுக்குள் நுழைந்து மறைந்தது. வராஹ ரூபத்தில் வந்து தனக்கு வழிகாட்டியது சாக்ஷாத் பகவான்தான் என்று ஸ்ரீ நாராயண தீர்த்தர் உணர்ந்தார். அவரும் கோயிலுக்கு சென்று ஸ்ரீ லக்ஷ்மீநாராயணரை வழிபட்டார். தன்னை வாட்டிய ரோஹம் நிவர்த்தியானதை உணர்ந்தார்.

அங்கு கூடி இருந்த அந்தணர்களுக்கும் வராஹ ரூப தரிசனத்தின் அற்புதத்தை கூறினார். வரகூரில் கோயில் கொண்டிருக்கும் பெருமானின் மகிமையை வியந்து அற்புதமான கீர்த்தனங்களை பாடினார்.

தீர்த்தர் அக்கோயிலின் பெருமையை உணர்ந்து அங்கே தங்கினார். அவர் முன் ஸ்ரீநிவாஸப் பெருமாள் கண்ணபிரானாகக் காட்சியளித்தார். பரவசமுற்று தீர்த்தர் ஸ்தோத்திரம் செய்தார். ருக்மணி, பாமா சகிதமாக கண்ணபிரான் காட்சியளித்தார். அப்போது பாமா தேவியார், தீர்த்தருக்கு அபயம் அளித்து, 'பகவான் கோபிகைகளுடன் லீலை புரிந்ததைப் பாடுவாயாக என்று ஆக்ஞையிட்டார்.' (Ref. டாக்டர் ரஜனிதேவி நாட்ய சாஸ்த்ரம்)

பாமாவின் திருவாக்கைக் கேட்டு ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி கிரந்தத்தை கோயில் ஸன்னதியிலேயே இருந்து பாடினார். அந்தண பாகவத சிரேஷ்டர்கள், அந்தக் கீர்த்தனங்களை அனுபவித்து அபிநயம் செய்து ஆடல் புரிந்து வழிபட்டார்கள்.

தீர்த்தர் அக்கோயிலின் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி திருவிழாவில் கலந்துகொண்டு மேலும் சிறப்பான கைங்கர்யங்களில் ஈடுபட்டார். தீர்த்தருக்கு வராஹம் காட்சியளித்தது முதல் அவ்வூருக்கு 'வராஹபுரி' என்ற பெயரும் வழங்கலாயிற்று.பின்னர் வரகூர் என்று வழக்குச் சொல்லில் அழைக்கப்படுகிறது.

வரகூர் தலத்தில், பல பெரியவர்கள் தோன்றி ஸ்ரீநிவாஸப் பெருமானின் திருவருள் பெற்று அற்புதம் புரிந்திருக்கின்றார்கள். தஞ்சை மராட்டிய மன்னன் அமரசிம்மன் அவையில் கி.பி. 1785-ல் இசை விற்பன்னனராக இருந்து, வரகூர் ஸ்ரீநிவாஸப் பெருமாள் மீது பல அரிய கீர்த்தனங்களைச் செய்தவர் வரகூர் ஸ்ரீ ஆனைபாகவதர் என்பவர். பின்னர் வரகூர் கோபால பாகவதர் என்பவர் இருந்தார். இந்த நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீ நாராயணகவி என்பவர்தான் வரகூர் உறியடித் திருவிழாவை 'சிக்யோத்ஸவ பிரபந்தம்', என்ற காவியமாகப் பாடியவர். இவருடைய சகோதரர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வியாகரணத்தில் நிபுணர். ஆனை பாகவதர் பரம்பரையினர் இன்றும் ஸ்ரீநிவாஸப் பெருமாள் திருக்கோயிலில் பாகவத சம்பிரதாய கைங்கர்யம் செய்து வருகின்றார்கள்.

ஸ்ரீ நாராயண தீர்த்தரின் விரிவான சரித்திர வரலாறு பல எழுத்தாளர்களின் கட்டுரைகளிலிருந்து தொகுத்து பின் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது

**கோயில்களின் அமைப்பும் மார்க்கமும்**

இவ்வாறு பெருமைவாய்ந்த வரகூரில் கட்டப்பட்ட சிவன் கோயிலும், பெருமாள் கோயிலும் உள்ளன. அக்ரஹாரத்தின் நடுவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயில். இக் கோயிலில் மூலவர் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண (ஸ்ரீனிவாஸ) பெருமாள் தாயாரை தன் மடியில் அமர்த்தி வைத்துக்கொண்டு மனதைக் கவரும் கோலத்திலுள்ளார். அக்ரஹாரத்தின் வடக்கு கோடியில் மேற்கு நோக்கி சிவன் கோயிலுள்ளது. லிங்க ரூபத்திலுள்ளவர் ஸ்ரீ மஹா கைலாசநாதர் என்றும் அம்பாள் ஸ்ரீ ஆனந்தவல்லி என்றும் அழைக்கப்படுகிறார்கள். இருவருக்கும் கோயிலில் தனித்தனி சன்னதி உள்ளது.

கிராமத்தின் வடக்கே சிவன் கோயிலை அடுத்து அதன் திருக்குளமும், அதற்கு சற்று வடக்கே காளிந்தி (கடுங்கால்) என்ற கிளை நதியும் உள்ளன. காளிந்தி நதியிலிருந்து சுமார் 1.5 கிலோ மீட்டர் தூரத்தில் காவிரியின் கிளை நதியான குடமுருட்டி ஓடுகிறது. குடமுருட்டி நதிக்கு அருகில் அதை ஒட்டினாற்போல் திருக்காட்டுப்பள்ளி - கண்டியூர் நெடுஞ்சாலை செல்கிறது.

தஞ்சாவூர் டவுனிலுள்ள பழைய பஸ் நிலையத்திலிருந்து கண்டியூர், நடுக்காவேரி மார்க்கமாக திருக்காட்டுப்பள்ளி, தோகூர் (கல்லணை), பழமார்நேரி, கூடநாணல், சோழகம்பட்டி, செந்தலை செல்லும் அரசு மற்றும் தனியார் பஸ்ஸுகள், நெடுஞ்சாலையிலிருந்து வரகூர் கிராமம் கிளைப் பாதை பிரியும் இடத்தின் வழியாகத்தான் செல்லுகின்றன. வரகூர் கிராமம் நெடுஞ்சாலையிலிருந்து சுமார் 1 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. இக்கிளைப் பாதை அகலமான தார் சாலையாகும். பெரிதும் சிறிதுமான ஊர்திகள் நெடுஞ்சாலையிலிருந்து கிளைப் பாதை வழியாக தடையில்லாமல் செல்லலாம். வரகூருக்கு வரும் ஸேவார்த்திகள் அதன் கிளைப் பாதையை எளிதில் அடையாளம் கண்டுகொள்ள, நெடுஞ்சாலையிலிருந்து கிளைப் பாதை பிரியுமிடத்தில்ஸ்ரீ கைலாசநாதர், ஸ்ரீ வேங்கடேச பெருமாள், வராஹத்துடன் கூடிய ஸ்ரீ நாராயணதீர்த்தர் இவர்களின் சிலைகளுடன் கூடிய நுழைவு வாயில் கட்டப்பட்டுள்ளது.

வரகூர் கிராமத்திற்கு மிகவும் அருகிலுள்ள ரயில் நிலையம் சுமார் ஏழு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள பூதலூராகும். இந்த இரயில் நிலையத்தின் வழியே செல்லும் அநேகமாய் எல்லா ரயில்களும் இங்கு நின்று போகின்றன. இருப்பினும் வரகூரிலிருந்து பூதலூர் ரயில் நிலையத்திற்கு செல்ல நேர்வழி ஊர்திகள் இல்லை. இதனால்

இங்கிருந்து வெளியிடங்களுக்கு செல்பவர்கள் தஞ்சை டவுனிலுள்ள ரயில் சந்திப்பையே அதிகமாக பயன்படுத்துகின்றனர்.

தஞ்சாவூருக்கு ரயில் மூலம் வரும் வரகூர் ஸேவார்த்திகள், ரயில் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள தஞ்சாவூர் பழைய பஸ் நிலையத்தை அடைந்து அங்கிருந்து தஞ்சாவூர் - கழுமங்கலம் செல்லும் (நெ.1 டவுன் பஸ்) அரசு பஸ்ஸில் ஏறி வரகூர் கிராம அக்ரஹாரத்திலுள்ள பெருமாள் கோயிலுக்கு எதிரில் இறங்கலாம். இந்த பஸ் ஒரு நாளைக்கு ஐந்து தடவைகள் தஞ்சாவூரிலிருந்து புறப்பட்டு வரகூர் வழியாக கழுமங்கலம் சென்று மறுபடியும் அங்கிருந்து புறப்பட்டு வரகூர் வழியாக தஞ்சாவூர் செல்கிறது.

தஞ்சாவூரிலிருந்து பஸ் மூலம் நேராக வரகூர் வந்தடைய சுமார் ஒரு மணி நேரமாகும். வரகூரிலிருந்து தெற்கிலுள்ள கழுமங்கலம் சுமார் ஐந்து கிலோ மீட்டர் தூரத்திலிருப்பதால் மேற்சொன்ன அரசு பஸ் தஞ்சாவூரிலிருந்து வரகூர் வந்தபிறகு கழுமங்கலம் சென்று திரும்பவும் வரகூர் வர சுமார் அரை மணி நேரமாகும்.

வரகூரிலிருந்து சுமார் ஆறு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பெரிய ஊர் திருக்காட்டுப்பள்ளியாகும். இவ்வூரில்தான் காவேரி நதியிலிருந்து குடமுருட்டி என்கிற கிளை நதி பிரிகிறது. திருக்காட்டுப்பள்ளியிலிருந்து மினி பஸ் மூலம் வரகூரை வந்தடையலாம்.

**வரகூரில் வீற்றிருக்கும் தெய்வத்தின் மகிமை**

பண்டைக் காலத்தில் வாழ்ந்த வரகூரின் அக்ரஹாரத்து வாசிகளுக்கு ஸ்ரீ வேங்கடேச பெருமாள்தான் குல தெய்வம். இப் பெருமாளுக்கு கைங்கர்யம் செய்வதுதான் இவர்களின் வாழ்க்கையின் குறிக்கோளாக இருந்தது. வேறொன்றையும் விரும்பாது பெருமாளுக்குச் செய்யும் தொண்டே தங்கள் பிறவியின் பயன் என்று அவர்கள் எண்ணிப் பணிவிடைசெய்தனர். இன்றும் அக்ரஹாரத்தில் எஞ்சியிருக்கும் அந்தணப் பெரியோர்களும் அவர்களின் இளைஞர் சந்ததிகளும், தங்களுடைய முன்னோர்கள் காட்டிய வழியையே விடாது பின்பற்றி பெருமாள் பணி செய்து வருகின்றனர்.

வரகூர் கிராமத்தின் அக்ரஹாரத்து குடும்பத்தைச் சேர்ந்த வெளியூர்வாசிகளும் தங்களின் குல தெய்வத்தின் மேலுள்ள விஸ்வாசத்தை வெளிப்படுத்த அடிக்கடி வரகூர் வந்து தங்களின் குல தெய்வத்திற்கு காணிக்கையாகவும், நன்கொடையாகவும் கொடுத்தும் மேலும் சரீரத்தின்மூலமும் தொண்டு செய்து வழிபட்டு செல்கின்றனர்.

சுமார் 22 ஆண்டுகளுக்குமுன் (2-8-1981) திரு பரணிதரன் ஆனந்தவிகடனில் வரகூர் வாசிகளைப் பற்றி எழுதியுள்ள பின்வரும் கருத்து இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன என்றால், அது எல்லோருக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கும்.

*"வரகூர்வாசிகள் ஸ்ரீ வேங்கடேச பெருமாளை தங்களது குல தெய்வமாக வழிபட்டு வருகின்றனர். தங்கள் உடல், பொருள் ஆவியை அத் தெய்வத்திற்கு அற்பணித்து பெருமாளின் சேவையையே பிறவிப்பயனின் பெருமையாக கருதுகின்றனர். இன்றும் இக்கிராமத்தை சேர்ந்தவர்களிடையே ஒரு பழக்கமிருந்து வருகின்றதாம். அக் கிராமத்திலிருந்து வேலைக்காக வெளியூர் செல்லுகின்றவர்கள் தங்கள் முதல் மாத சம்பளத்தை கோயிலுக்காக அனுப்பிவைத்து விடுவார்களாம்."தங்கள் சொந்த ஊரிலோ, கிராமத்திலோ உள்ள ஆலயங்களுடன்இப்படியோர் அன்யோன்ய உறவை ஏற்படுத்திக் கொள்வதும், அங்குறையும் தெய்வங்களின் அருட்சக்தி மீது அசைக்கமுடியாத நம்பிக்கையை வைப்பதும் பக்தி இயக்கத்தின் இன்றியமையாத சேவைகளாகும். பாரத தேசத்தின் கடல் கடந்து வசிக்கும் பக்தர்கள் வரகூர் காட்டும் வழியையே பின்பற்றத் தொடங்கினால், இன்று விளக்கிற்கும், நைவேத்தியத்திற்கும் பல தமிழக ஆலயங்களில் ஒளிபிறக்க உதவி புரிந்தவர்களாவர்".*

இன்றும் கோயிலின் பண்டைய கலாசாரம், நடைமுறைவிதிகள் சிறிதளவும் மாறாமல் பாதுகாக்கப்பட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருவதுடன்

ஸ்ரீ வேங்கடேச பெருமாளின் சான்னித்யத்திற்கு ஒருபொழுதும் குறைவராமல் சக்தியுள்ள தெய்வமாகவே காக்கப்பட்டுவருகிறது. கோயிலின் வெளிப்புற தூய்மையும், நித்ய வேத கோஷமும், பஜனை கானமும் இங்கு ஸேவிக்கவரும் பக்தர்களின் தூய்மையான மனப்பான்மையும்தான் இவ்வூரில் உறைபவரின் பெருமையை வெளிப்படுத்துகிறது.




பண்டைக்காலத்தில் இக்கிராமத்தில் வாழ்ந்த தன்னலமற்ற பெரியோர்கள் வித்திட்ட குல தெய்வ ஆராதனை என்ற விதைதான் இன்று பல கிளைகளுடன் கூடிய பெரிய மரமாகி அழிக்கமுடியாதபடி பக்தி பாவமாக வளர்ந்துள்ளது. வரகூர் கிராமத்து வெளியூர் வாழும் குடும்பத்தினர் தாங்கள் பெறும் முதல் மாத ஊதியத்தை பெருமாளுக்கு காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ அனுப்புவது என்ற பண்டைக்காலப் பழக்கம் இன்றும் மாறாமல் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. உதாரணத்திற்கு சமீபகாலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி.

கடந்த 2002-ம் வருடம் ஆகஸ்ட் மாதம் அமெரிக்காவில் பணிபுரியும் வரகூர் குடும்பத்து ஓர் இளைஞரிடமிருந்து தனது முதல் சம்பளமாக ரூ.2.30 லக்ஷம் உறியடி உத்ஸவத்திற்கு "நன்கொடை நிரந்தர வைப்பாக" ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஒரு குக்கிராமத்திலுள்ள ஆலயத்திற்கு யாதொரு விளம்பரமில்லாமல் சமீப காலத்தில் வருடா வருடம் கணிசமான தொகை உண்டியலின் மூலம் வருமானமாய் வருகிறதென்றால் அதில் பெரும்பான்மையான தொகை வரகூர் கிராமத்து வெளியூர்வாசிகளின் காணிக்கைதான் என்பதிலும், அது அவர்களின் தங்கள் குல தெய்வத்தின்மேலுள்ள பிரிக்கமுடியாத பக்தியைத்தான் வெளிப்படுத்துகிறது என்பதில் சிறிதளவும் சந்தேகமில்லை.'

1999-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 16-ம் தேதி இக்கிராம கோவில்களுக்கு நடந்த கும்பாபிஷேகத்திற்கான சுமார் இருபது லக்ஷத்திற்கும் அதிகமான தொகையும் பொருள்களும் வரகூர் கிராமத்தைச் சேர்ந்த பல குடும்பங்களே பகிர்ந்துகொண்டன என்று சொன்னால் அவ் உண்மையைக் கேட்க எல்லோருக்கும் ஆச்சர்யமாகத்தான் இருக்கும். வரகூர் கிராமத்தைச் சேர்ந்த குடும்பங்களின் வெளியூர்வாசிகள் தங்கள் குழந்தைகளுக்கு "முதல் முடி" வரகூர் பெருமாள் சன்னதியில்தான் கொடுக்கிறார்கள். மேலும் இக் கிராமத்தைச் சார்ந்த குடும்பங்களின் பல நபர்கள் அரசாங்கம் மற்றும் தனியார் நிறுவனத்தில் உயர்ந்த பதவியில் இருந்துகொண்டு பெருமாளின் ஆசியுடன் நம் நாட்டின் பல துறைகளில் தொண்டு புரிந்து வருகிறார்கள்.

**உறியடி உத்ஸவம்**

ஸ்ரீ நாராயண தீர்த்தரால் தொகுத்தளிக்கப்பட்ட உறியடி உத்ஸவம் ஒவ்வொரு வருடமும் காயத்ரி ஜப நாளன்று தொடங்கி ஜென்மாஷ்டமிக்கு மறுநாள் உறியடித் திருநாளாக கொண்டாடப்பட்டு வருகிறது. அதற்கு மறுநாள் ஸ்ரீ ருக்மிணி கல்யாணம், அதற்கு மறுதினம் ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தியுடன் உத்ஸவம் முடிவடைகிறது.

இவ் உத்ஸவம் 10 தினங்களுக்கு நடைபெறுகிறது. வேத விற்பன்னர்களால் தினமும் பகலில் 6.00 மணி நேரம் ஓதப்படும் சதுர்வேத பாராயணமும், இரவில் 7.30 மணி முதல் நடு இரவு 2.00 மணி வரை உள்ளூர் / வெளியூர் பாகவத கோஷ்டியினர்களால் பாடப்படும் ஸம்ப்ரதாய பஜனையும், திவ்யநாம சங்கீர்த்தனமும் முக்கியமானவை. வரகூரை சார்ந்த குடும்பத்தினர், உறவினர்கள், மற்றும் நண்பர்கள் இந்தியா / மற்றும் வெளிநாட்டில் எப்பகுதியில் இருந்தாலும் வரகூர் வந்து உறியடி திருநாளில் கலந்துகொண்டு, காணிக்கை, நன்கொடை, மற்றும் சரீர சேவைகள் மூலம் குலதெய்வத்திற்கு பக்தியுடன் தங்கள் உள்ளங்களை சமர்ப்பிப்பது மற்றொரு சிறப்பம்சமாகும்.

பூஜ்யஸ்ரீ காஞ்சி பரமாச்சார்யாளின் மிகுந்த அபிமானத்தைப் பெற்ற ஊர் வரகூர். பூஜ்யஸ்ரீ பரமாச்சார்யாள் உபமானத்திற்கு வரகூர் உறியடி உத்ஸவத்தில் வரகூர்வாசிகளின் ஈடுபாட்டையும் தன்னலமற்ற சேவையையும் ஒப்பிட்டு அதேபோல் காஞ்சி மடத்திற்கும் பக்தர்கள் சேவை செய்ய வேண்டும் என்று அங்கு வரும் பக்தர்களுக்கு சொல்வார்களாம்.

சுமார் 70 வருடங்களுக்குமுன் வரகூரில் வாழ்ந்து மறைந்த ஸ்ரீ நாராயண கவி என்பவர் (1868-1935) உறியடி உத்ஸவத்தை "ஸ்ரீ க்ருஷ்ண சிக்யோத்ஸவம்" என்ற சம்பு பிரிவை சார்ந்த காவியத்தில் வசனங்களாகவும் / செய்யுள்களாகவும் விரிவாக எழுதியுள்ளார். சுமதி / சுகுனன் என்ற இரண்டு கின்னரர்கள் பூஉலகத்திற்கு வருகைதந்து விசேஷமாக வராஹாபுரி என்று அழைக்கப்படும் வரகூரையடைந்து அங்கு நடைபெற்ற உறியடி உத்ஸவத்தை கண்டுகளித்து அங்கு வீற்றிருக்கும் பகவானை போற்றி வணங்கிய பின் மகிழ்ச்சியுடன் தங்கள் இருப்பிடம் சென்றார்கள் என்று வர்ணித்து அவ்விருவரின் உரையாடல்கள் மூலம் உறியடி உத்ஸவத்தை இக்காவியம் வெளிப்படுத்துகிறது. முக்கியமான 69 மெட்டுகளில் 524 செய்யுள்கள் 66 சூர்ணிகைகள் இவைகளால் பக்திரசத்தை வெளிக் கொண்டுவரும் மாபெரும் காவியமாகும். இக் காவியம் ஐந்து ஆச்வாசங்களாக பிரிக்கப்பட்டுள்ளது.

முதல் ஆச்வாசத்தில் சோழநாடு, அங்குள்ள புண்ணிய ஸ்தலங்கள், புனித காவேரி ஆற்றின் இரு கரையில் வாழும் மக்கள் அந் நதியில் காலையிலும், மாலையிலும் நீராடி தெய்வ வழிபாடு செய்யும் நேர்த்தி, ஸ்ரீ நாராயண தீர்த்தரின் தீராத வயிற்று நோயை தீர்க்க, வராஹ உருவில் தோன்றிப் பகவான் அன்னுரை வராஹபுரத்திலிருக்கும் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயிலுக்கு அழைத்து செல்லுதல், ஆவணி மாதம் பௌர்ணமிக்கு மறுநாள் தொடங்கும் உறியடி உத்ஸவம் வர்ணிக்கப்படுகின்றன.

இரண்டாவது ஆச்வாசத்தில் உறியடி நாளன்று காலையில் பெருமாள் உத்ஸவமூர்த்தியாக வெண்ணை குடத்துடன் பல்லக்கில் எழுந்தருளி வீதி வலம் வந்து கடுங்கலாறு கரையிலுள்ள மண்டபத்தில் அமர்வது வர்ணிக்கப்படுகிறது.

மூன்றாவது ஆச்வாசத்தில் உறியடி திருநாள் இரவு உத்ஸவமூர்த்தி ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவியுடன் கடுங்கால் மண்டபத்திலிருந்து புறப்படும் காட்சி, பகவானின் பின்புறம் அங்கப்ரதக்ஷிணம் செய்யும் பக்தர்கள் முன்னால் ஸ்ரீ நாராயண தீர்த்த தரங்கங்கள் பாடிக்கொண்டுவரும் பாகவதர்கள், அங்கபிரதக்ஷிணம், அதன் பின்புறம் வேத கோஷத்துடன் வரும் வேத விற்பன்னர்களின் வருகை, ஸ்ரீ பெருமாள் கோயில் வடபுறம் அமைக்கப்பட்டுள்ள பந்தலுக்கு வருகை, இடைவேஷம் தாங்கியவர்கள், சப்பாணியர் மூன்று முறை வலம் வருவது, பின்னர் உறியடி மரத்தில் இருக்கும் பானையை உடைத்து கைகளினால் பிடித்து இழுத்து பகவத் பிரஸாதத்தை அடைவது வர்ணிக்கப்படுகின்றன.

நான்காவது ஆச்வாசத்தில் வழுக்குமரம் ஏறுதல் அதன்மேல் உள்ள காணிக்கைப் பிரஸாதத்தை எடுத்து பகவானிடம் சமர்ப்பித்தல், மங்கள தீபம் ஆனவுடன் கோயில் உள்ளே சென்று ஐந்து பிரதக்ஷிணம் செய்து திருவந்திக் காப்பு, கோணங்கி வழிபாட்டிற்கு பிறகு ஏழாவது பிரதக்ஷிணத்தை முடித்து உள்ளே அர்த்த மண்டபத்தில் ஏகாந்த சேவை செய்து பின்னர் பிரஸாதங்கள் நிவேதனம்ஆகி பக்தர்களுக்கு பகிர்ந்து அளிப்பது இவைகள் வர்ணிக்கப்படுகின்றன.

ஐந்தாவது ஆச்வாசத்தில் உறியடி திருநாளின் மறுநாள் நடைபெறும் ஸ்ரீ ருக்மிணி கல்யாண உத்ஸவம் வர்ணிக்கப் படுகிறது.

1981-ம் வருடம் வரகூர் வருகை தந்து உறியடி திருநாளின் காட்சிகளை நேரில் பார்த்து ரசித்த ஸ்ரீ பரணிதரன் அவர்கள்

ஆனந்தவிகடன் வார பதிப்பில் திருத்தல பெருமை கட்டுரையில் விவரித்து எழுதியதை தற்கால சந்ததியர்கள் அறியும் வண்ணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

“ஒவ்வொரு கோவிலுக்கும் ஒவ்வொரு விதமான உற்சவங்கள் உண்டு. ஒவ்வொரு திருத்தலத்திற்கும் ஒவ்வொரு விழாவினால் சிறப்பு, பெருமை, மகிமை எனலாம். வரகூர் ஆலயத்திற்கும், ஊருக்கும் உறியடி உற்சவத்தினால் சிறப்பு. ஆவணி மாதம் நடைபெறும் அந்த உற்சவத்தின் போது நாடெங்கும் உள்ள வரகூர்வாசிகள் அங்கே கூடுகிறார்கள். அருகிலிருக்கும் கிராமங்களிலிருந்தெல்லாம் பக்தர்கள் வருகிறார்கள். அச்சமயம் விருந்தோம்பல் பண்பு சிறக்கிறது. கிருஷ்ண லீலா தரங்கிணியின் முழக்கம் திக்கெட்டும் ஒலிக்கிறது. வயோதிகர் முதல் சிறுவர்கள் வரை ஆண்கள், பெண்கள் அத்தனை பேரும் அந்தக் கோலாகல விழாவில் குதூகலத்துடன் கலந்துகொள்கிறார்கள்.

இந்த உற்சவம் ஒவ்வோர் ஆண்டும் ஆவணி மாதம் காயத்ரி ஜபத்தன்று தொடங்குகிறது. கோகுலாஷ்டமி வரை ஒவ்வொரு நாளும் தரங்கிணியில் கண்டவாறு பகவானின் லீலைகளைக் காளிங்க நர்த்தனம் முதல் ருக்மிணி கல்யாணம் வரை ஆடிப்பாடிக் களிக்கிறார்கள்.

கோகுலாஷ்டமிக்கு மறுநாள், உறியடி உற்சவம். அன்று பொழுது விடிந்ததிலிருந்தே கிராமம் முழுவதும் ‘கோவிந்தா கோவிந்தா’ என்ற மந்திரச் சொல் சூழ்கிறது. அச்சொல் சாட்சாத் கோவிந்தனை மட்டுமின்றி, அவரது பரம பக்தரான கோவிந்தனையும் (நாராயண தீர்த்தரின் பெயர்) குறிக்கிறது. அதிகாலையிலேயே பகவானுக்குத் திருமஞ்சனம் ஆகிறது.

அடுத்து, பாலகிருஷ்ணனாக அவர் அலங்காரம் செய்யப்படுகிறார். வெண்ணெய் நிரப்பப்பட்ட தங்கக்குடத்தை அரவணைத்தபடி, பகவான் காட்சிதர, அவரை ஒரு தனிப்பந்தலில் எழுந்தருளச் செய்கிறார்கள். பின்னர் வெள்ளிப் பல்லக்கில் அமர்த்தப்படுகிறார். மங்கள வாத்தியம் பொன்னிசை பொழிய, பாகவதர்களும் பிறரும் நா இனிக்க நாமாவளி முழங்க, சுவாமி புறப்பாடாகிறது.

பகவானைத் தேடிக் கொண்டு வேதம் பின்னால் வருகிறது. தேவர்கள் விண்வெளியில் சஞ்சரிக்கத் தொடங்குகிறார்கள். ஒவ்வோர் இல்லத்தின் முன்பும், இல்லத்தரசிகள் இழை கோலம் போட்டு காவி மண் பூசி, குத்துவிளக்கேற்றி, பூ பழம், வெற்றிலை பாக்குத் தட்டோடு ஆரத்தியெடுக்கக் காத்திருக்கிறார்கள்.

வரகூரே பக்திக் கடலில் மிதந்து கொண்டிருக்கிறது. தெய்வ நம்பிக்கை அற்றவர்களையும் மனம் மாறச் செய்யும் தெய்வீகக் காட்சி அது.

நின்ற திருக்கோல மூர்த்தி, தவழும் வடிவம் பெற்று இடக்கையால் பெரிய தங்கக் குடத்தை அணைத்திருக்கிறார். அதில், வெண்ணெயும் பாலும் தளும்புகிறது. அக் காட்சியைக் காணும் நம் உள்ளம் ஆனந்தத்தில் துள்ளுகிறது.

*'உறியடியோ கோவிந்தோ'* *'உறியடியோ கோவிந்தோ'*

கிராமமெங்கும் நாம கீதம் இன்ப முழக்கமாய் எதிரொலிக்கிறது. கிராம வீதியில் பல்லக்கு ஒவ்வொரு வீடாக நிற்க, கற்பூர ஆரத்தி நடைபெறுகிறது. வயதானவர்களின் மேற்பார்வையில் இளைஞர் பட்டாளம்தான் பல்லக்குப் பவனியின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறது. அடேயப்பா! எத்தனை உற்சாகம், எத்தனை ஆர்வம், எத்தனை பக்தி! வாழையடி வாழையாகப் பெருகிவரும் இவ்வூர் இளைஞரின் இந்தப் பக்திப் பணி வரகூர் தலப் பெருமையைப் பன்மடங்காக்கிறது.

வேத பாராயணம் பின் தொடர, சுவாமி கிராமத்தின் வடக்கு எல்லையான 'கடுங்கால்' என்ற வாய்க்காலின் கரைக்கு வந்து சேரும்போது மாலை நான்கு மணி ஆகிவிடுகிறது. அங்கிருக்கும் மண்டபத்தில் அவர் எழுந்தருளுகிறார். வனபோஜனம் தொடங்குகிறது. அனைவருக்கும் வயிறாரப் பிரசாதங்கள் வழங்கப் படுகின்றன. பின்னர், கூட்டம் கலைந்து சற்று ஓய்வு எடுத்துக் கொள்கிறது. நடுநிசியைக் கடந்தும் கிராமம் பகல் போல் காட்சியளிக்கிறது. ஒரு மணிக்குப் பிறகு கடுங்கால் மண்டபத்தருகே பரபரப்புத் தொடங்குகிறது. வாணவேடிக்கைகள் அமர்க்களப் படுத்தப்படுகின்றன.

சுவாமி புறப்பட்டு விட்டார். அவர் உறியடி உற்சவத்தில் கலந்து கொள்ளத் தயாராகிவிட்டார். முன்னால் பஜனை கோஷம் முழங்குகிறது. முப்பதுக்கும் மேற்பட்டவர்கள், புழுதியும் சேறும் கலந்த தங்கள் உடலால் வரகூர் மண்ணுக்குப் புண்ணியம் சேர்த்துக் கொண்டே சுவாமிக்குப் பின்னால் அங்கப் பிரதட்சிணமாக புரண்டு வருகிறார்கள்.கோயிலுக்கு எதிரே ஒரு வீட்டில் அமளிதுமளிப்படுகிறது. உள்ளே அடைக்கப்பட்ட கிராமச் சிறுவர்கள் வீட்டை ரெண்டு பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். கதவுகள் தூள் தூளாகிக் கொண்டிருக்கின்றன. கிஷ்கிந்தையோ! இல்லை. கோகுலம்தான்! அவர்களெல்லாம் பசுக்களாகவும், கன்றுகளாகவும் அடைக்கப் பட்டிருக்கிறார்களாம். கொட்டிலைத் திறந்து

விடும்படி கலாட்டா செய்கிறார்கள். 'உறியடியோ கோவிந்தோ' என்று முழக்கமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். உறியடி உற்சவத்தின்போது இப்படியும் ஒரு விளையாட்டு!

உறியடிக்கான ஏற்பாடுகள் ஜரூராகிக் கொண்டிருக்கின்றன. அண்டாக்களில் நீர் நிரப்பப்பட்டு விட்டது. அனுபவ மிக்க சூத்ரதாரி, குறுக்கு மூங்கிலும் பிரசாதம் உள்ள மூங்கிற் பெட்டியும் சீராக இருக்கின்றனவா என்று பார்வையிடுகிறார்.

கோவிலுக்கருகில் சுவாமி வந்து சேர்ந்தபோது விடியற்காலை இரண்டரை மணியாகிவிட்டது. அவர் பந்தலில் வந்து அமர்ந்ததும், 'யாதவர் தலைவ'ருக்கு மரியாதைகள் செய்யப்படுகின்றன. தலைவராக வேஷம் போட்டுக் கொள்வதற்கென்று ஒரு குடும்பம் உண்டு. அவருக்குப் பட்டாச்சாரியார் பரிவட்டம் கட்டி, பூரண கும்பம் அளித்து, தீபாராதனை காட்டி சுவாமியிடம் அழைத்துச் செல்கிறார். பின்னால் 'யாதவர்' கூட்டம் செல்கிறது. அவர்களைத் தொடர்ந்து 'சப்பாணிகள்' செல்கிறார்கள். உடல் ஊனமுற்றவர்களும், அவர்களுக்காகப் பிரார்த்தித்துக் கொள்பவர்களும் தரையில் அமர்ந்தபடியே 'தத்தித் தத்தி'ச் செல்கிறார்கள். அவர்களுக்குப் பின்னால் 'பசுக்களும் கன்றுகளும், இவர்கள் சாக்குப் படுதாவிற்குள் மறைந்துகொண்டு அட்டகாசம் செய்கிறார்கள். முரட்டுக் காளைகளை அடக்குபவர்கள் போன்று உடன் செல்லும் பெரியவர்கள் திணறிப் போகிறார்கள். இங்கு இதுவும் ஒரு வேடிக்கை!

அங்கப்பிரதட்சிணம் செய்பவர்கள், சப்பாணிகள், இந்த முரட்டுப் 'பசுக்கள்' அனைவரும் மும்முறை சுவாமியை வலம் வந்ததும், தலைமை யாதவர் சுவாமிக்குக் காணிக்கை செலுத்தி, உறியடிக்கு அவரிடமிருந்து கழியைப் பெறுவதாக ஒரு சடங்கு நடந்த பின்னர், உறியடி தொடங்குகிறது. அது அதிக நேரம் நீடிக்கவில்லை. அரைமணிக்குள் மத்தளம் போன்ற மூங்கில் பெட்டி ஓர் இளைஞரிடம் சிக்கிவிட்டது. ஆனால், அதை உடைத்துப் பிரசாதங்களை எடுப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது!

வழுக்கு மரம் மிகவும் கடினமான விளையாட்டாகி விட்டது. பாவம், இரு கட்சியினரும் மிகவும் சிரமப்பட்டு விட்டார்கள். எத்தனை வேட்டிகள்! எத்தனை தடவை கட்டுவார்கள்! எத்தனை தரம்தான் அது வழுக்கிக் கொண்டு கீழே வரும்! உண்மையிலேயே பெரிய சோதனைதான்.

உறியடியும் வழுக்கு மரமும் விளையாட்டுக்கள் மட்டுமல்ல; ஸ்ரீ கிருஷ்ண லீலைகளான இவற்றுக்குத் தத்துவார்த்தங்கள் உண்டு.

மேலே உள்ள சுவாமி பிரசாதங்கள்தான் ஞானம் என்பதும் அஞ்ஞான இருளில் உழன்று கொண்டிருக்கும் நாம், பல சோதனைகளையும் இடையூறுகளையும் கடந்து, அனுபவங்களினால் அறிவு பெற்று பூரண ஞானத்தைப் பெறுவது தான் மோட்சம் என்பது. அதுவே பேரானந்த நிலை. அதுவே பெருமாளின் ஈடிணையற்ற பிரசாதம்.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் தமது கிருஷ்ண லீலா தரங்கிணியில் இம்மாதிரியான தத்துவார்த்தங்களை விவரித்திருக்கிறார்.

உற்சவங்கள் பக்தியோகத்திற்குத் துணை புரிகின்றன. அவற்றின் உட்கருத்துக்கள் ஞான சாதனங்களாகின்றன.

உறியடி, உள்ளத்தை உயர்த்த வேண்டும் ; வழுக்குமரம் வாழ்க்கைக்குப் பயன்பட வேண்டும்.

**உறியடி உற்சவ சம்பிரதாயங்கள்**

காயத்ரி ஜபத்தன்று காலையில் காலசந்திக்கு பிறகு சிறப்பு அபிஷேகம் ஆனவுடன் குறித்த நேரத்தில் பரம்பரை அறங்காவலர்கள், பாகவதர்கள், வேதபண்டிதர்கள் மற்றும் கிராமத்தார்கள் முன்னிலையில் தேங்காய் உடைத்து நைவேத்தியம், கற்பூர ஆராதனை ஆனவுடன் ஸ்ரீ தேவி, பூதேவி இவர்களுடன் கூடிய உற்சவர் வேங்கடேசபெருமாளை உறியடியோ! கோவிந்தோ! என்ற கோஷத்துடன் கண்ணாடி மண்டபத்தில் அமைக்கப்பட்ட ஊஞ்சலில் ஏற்றி வைப்பார்கள். அதற்குப் பிறகு முதல் நாள் மண்டகப்படிதாரரின் முன்னிலையில் தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்து கற்பூர ஆராதனை செய்வார்கள்.

அன்று மாலை சுமார் 4 மணி அளவில் நீண்டு உயர்ந்த மூன்று மூங்கில் மரங்களை ஒன்று சேர்த்து கட்டி அம்மரத்தின் நுனியில் கோபுரம் போன்ற அமைப்பில் மூடி அமைத்து அதை தேர்ச்சீலைகளால் அலங்கரித்து பெருமாள் கோவிலுக்கு எதிரில் ஆழமான குழிவெட்டி அதில் அந்த உறியடி மரத்தை அசேஷ மஹா கிராம ஜனங்கள் நடுவார்கள். அன்று மாலை சுமார் 6.30 மணியளவில் நான்கு வேதம் பயின்ற வேத பண்டிதர்கள் கூடி சுமார் ஒரு மணி நேரம் பாராயணம் செய்வார்கள்.பிறகு ஸ்தல பாகவதர் 7.30 மணியளவில் அலங்கரித்து வைக்கப்பட்ட ஸ்வாமியிடம் பிரார்த்தனை செய்துகொண்டு ஸம்பிரதாய பஜனையை தொடங்குவார்.

முதல்நாளில் இருந்து அஷ்டமி திதிக்கு முதல்நாள் வரை இரவு 7.30-லிருந்து ப்ராசீன பஜனையும் அதற்கு பின் திவ்யநாம பஜனையும் இரவு 2 மணிவரை தொடர்ந்து செய்வார்கள். ஒவ்வொரு தினமும் இரவில் உற்சவ மூர்த்தியை பலவித ரூபங்களில் அலங்கரித்து ஆராதனை செய்வார்கள் அஷ்டமி தினம் இரவில் ப்ராசீன பஜனைக்கு பிறகு 10.00 மணியளவில் ஸ்ரீ கிருஷ்ண ஜனன உபன்யாசம் நடைபெறும். கோகுலாஷ்டமி தினத்தில் அஷ்டமி திதியில் ஸ்வாமியை யசோதை கிருஷ்ணனாக அலங்காரம் செய்து சரியாக இரவு 12.00 மணியளவில் தீபாராதனை செய்து 'கிருஷ்ண ஜனனத்தை' கொண்டாடுவார்கள்.

வீதியை தோரணங்களால் அலங்கரிப்பது, வழுக்குமரத்துக்கு பசை அறைத்து பசை போடுதல் போன்ற சேவைகள் கிராம இளைஞர்களின் பணியாகும். இதற்கான செலவுகளை அவர்களே ஏற்பார்கள் தங்களுடைய பழைய புத்தகங்களை விற்றும் வசூலித்தும் பணம் சேர்ப்பார்கள். காகிதக் கட்டுப்பாடு இருந்த 1941-42-ஆம் வருடங்களில்

பனைமரத்திலிருந்து ஓலையை பறித்து காயவைத்து சாயம்ஏற்றி தோரணமாக செய்து இப்பணியை ஆர்வத்துடன் செய்துள்ளார்கள்.

மறுநாள் காலை உறியடி அன்று உஷக்காலம், காலசந்தி ஆன பிறகு ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்து பட்டு சாற்றி குறித்த நேரத்தில் கருடாழ்வார் மண்டபத்தில் உள்ள பல்லக்கில் எழுந்தருள செய்வார்கள். ஸ்வாமிக்கு நவநீத கிருஷ்ண முன்/பின் அலங்காரம் முடிந்தவுடன் அன்றைய உச்சிகால நைவேத்தியம் செய்வார்கள். பாகவதர்கள் புண்ட்ரீகம் போட்டு பாடியவுடன் கற்பூர தீபாராதனை காட்டி வெள்ளி வாரையை சாற்றுவார்கள்.

மறுபடியும் பாகவதர் புண்ட்ரீகம் போட்டவுடன் முதலில் உண்டியலும் பிறகு ஸ்வாமியும் புறப்படும். பெரிய பிரகாரம் வலம்வந்து கோபுர தீபாராதனை ஆனபின் மண்டகப்படிதாரர் பூர்ணகும்ப மரியாதையுடன் ஸ்வாமியை தெற்கே அமைந்திருக்கும் பந்தலில் எழுந்தருள செய்வர். அதற்குள் பாகவதர்கள் ஹரிநாராயண, தோடயமங்களம் பாடி முடிப்பார்கள். வெள்ளிவாரையை கலைத்து மரவாரையை சாற்றிய பிறகு மண்டகப்படிதாரர் முன்னிலையில் தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை ஆனவுடன் நவநீதகிருஷ்ணன் வீதியுலா வருவார்.

பல்லக்கு பின்னால் வேத பண்டிதர்கள் வேதகோஷத்துடனும், பாகவதர்கள் பஜனை பாட்டுடனும் பின் தொடருவார்கள். வீதியுலா முடிந்தவுடன் மண்டகப்படிதாரர் பூர்ணகும்ப மரியாதையுடன் நவநீத கிருஷ்ணனை கடுங்கால் கரையில் வரவேற்று அங்குள்ள மண்டபத்தில் எழுந்தருள செய்வார். வாரை கலைக்கப்பட்டவுடன் சகஸ்ரநாம அர்ச்சனை நடைபெறும். வேத பண்டிதர்கள் மற்றும் பாகவதர்கள் வந்தவுடன் பாகவதர்கள் மங்களம் பாடுவார்கள்.

பிரசாத நைவேத்தியத்திற்கு பிறகு கற்பூர ஆரத்திசெய்து பிரசாதத்தை வினியோகம் செய்வார்கள்.மாலை சுமார் 6.00 மணியளவில் நவநீத கிருஷ்ணன் அலங்காரம் கலைக்கப்பட்டவுடன் வேதமந்திரங்களுடன் கடஸ்தாபனம் செய்வார்கள்.

வேத விற்பன்னர்கள் முன்னிலையில் இரவு மண்டகப்படிதாரர் சங்கல்பத்துடன் அபிஷேகம் ஆரம்பமாகும். ஒவ்வொரு திரவ்ய அபிஷேகத்திற்கு பிறகு பழம் வெற்றிலை பாக்கு நைவேத்தியம் செய்து தீபாராதனை நடக்கும். பிறகு சந்தனாபிஷேகத்திற்கு பிறகு உற்சவ மூர்த்திக்கு கண்திறந்து புஷ்பம் சாற்றியவுடன் இருபுறமும் சாமரம் வீச "அவதாரயா" என்ற வேதகோஷம் நடக்கும். ஒரு தரங்கம் பாடி

முடித்தவுடன் ஸ்வாமிக்கு மந்திரகோஷங்களுடன் அபிஷேகம் செய்வார்கள். பிறகு தீபாராதனை நடக்கும்.

அன்று இரவு மண்டகப்படிதாரரிடம் இருந்து கிடைக்கப்பெற்ற பட்டுவேஷ்டி பட்டுபாவாடை இவைகளை சாற்றி ஸ்ரீதேவி, பூதேவி இவர்களுடன் வெள்ளி கேடயத்தில் வேங்கடேச பெருமாளை உறியடிக்கும் க்ருஷ்ணனாக அலங்கரித்து விசேஷ புஷ்ப அலங்காரங்களை செய்வார்கள். கடுங்கால் மண்டபத்திலுள்ள உற்சவ மூர்த்தி அலங்காரம் செய்து முடிந்தவுடன் கிராமத்தார்கள் ஒன்றுகூடி வழுக்கு மரத்தை ஏற்றுவார்கள்.

பிறகு பரம்பரை அறங்காவலர்கள் மற்றும் கிராம மஹாஜனங்கள் சஹிதம் மேளவாத்தியம், தீவிட்டி, குடை, தூபம் இவற்றுடன் பட்டாச்சாரியார் சாயரக்ஷை நைவேத்தியம் எடுத்து செல்லுவார். அலங்காரம் முடிந்தவுடன் உண்டியல் பெட்டியை கடுங்கால் மண்டபத்திலிருந்து யாதவர்கள் அடைக்கப்பட்டிருக்கும் வீட்டு திண்ணைக்கு கொண்டு வருவார்கள்.

பக்தர்கள் தங்களை யாதவர்களாக வேஷம் தரித்துக்கொண்டும் நாமம் போட்டுக்கொண்டும் ஸ்ரீ வேங்கடேச பெருமாளை ஸ்ரீ கிருஷ்ணனாகவும் தங்கள் தலைவனாக - முன் இடையராக பாவித்துக்கொண்டும், சில யாதவர்கள் தங்களை பசுக்களாகவும், கன்றுகளாகவும் பாவித்துக்கொண்டு, ஒரு வீட்டில் பசுக்களை அடைப்பட்டிருப்பதைபோல் இருப்பார்கள். அவர்கள் இடையே சலங்கை, மணிகளை பசுக்களைப் போன்றே கட்டிக்கொண்டிருப்பார்கள். தங்கள் தலைவன் முன் இடையர் வந்ததும் அவருக்குப் பின்னால் கொட்டிலில் இருந்து கிளம்பும் பசுக்கள்போல் தொடர்ந்து ஆரவாரத்துடன் செல்வார்கள்.

உண்டியல் வந்தவுடன் முன் இடையருக்கு நாமம் போடப்படும். பிறகு மற்றவர்கள் நாம காணிக்கை செலுத்தி நாமம் போட்டுக்கொண்டு கடுங்கால் மண்டபத்திற்கு வருவார்கள். மண்டபத்தில் உள்ள ஸ்வாமிக்கு வெள்ளி வாரையை சாற்றி தீபாராதனை ஆனவுடன் தீவிட்டிகள் ஏற்றப்பட்டு ராஜநடையுடன் ஸ்வாமி புறப்பட தொடங்குவார். பாகவதர்கள் தரங்கம் பாடிக்கொண்டு முன் செல்வார்கள். ஸ்வாமிக்கு பின்னால் பிரார்த்தனை செய்ய வேண்டிக் கொண்ட நூற்றுக்கணக்கான பக்தர்கள் அங்கப்ரதக்ஷிணம் செய்வார்கள்.

வீதியுலா முடிந்து பந்தலுக்கு வந்தவுடன் ஸ்வாமியை வடக்குபுறம் பார்த்து 4 ஆயக்கோல்களில் நிறுத்துவார்கள். பின்பு பாகவதர்கள்

மூலவர் சன்னிதியை அடைந்து, அங்கு முதல் இடையருக்கான சடாரிக்கு பூஜை ஆனவுடன், சடாரி, பரிவட்டம் புஷ்பமாலை, தீர்த்தம், துளசி எல்லாவற்றையும் மூடிக்கொண்டு பட்டாச்சாரியார் முன்னிடையர் இருக்கும் வீட்டை நோக்கி புறப்பட்டு செல்வார். அப்போது பாகவதர்கள் "கோபாலா கோபாலா கோகுல நந்தன கோபாலா!" என்றபாட்டுடன் பட்டாச்சாரியாரை பின்தொடர்வார்கள்.

அந்த வீட்டு வாசலில், முன்இடையருக்கு பரிவட்டம் சாற்றி மாலையிட்டு 3-முறை தீர்த்தம் அளித்து சடாரி சாற்றி துளசி கொடுத்தபின் அவர் சிரசில் பால் சொம்பை வைத்து கையில் தண்டத்தை கொடுத்து கம்பளி போற்றியவுடன் தீபாராதனை நடக்கும்.

முதலில் முன் இடையர் செல்ல அதற்குபின் மாடுகளாக கிராமத்து சிறுவர்களும், இளைஞர்களும் அதன்பின் சப்பாணிகளும் படுதாவை போற்றிக்கொண்டு செல்வார்கள். அதன்பின் அங்கபிரதக்ஷிணம் செய்பவர்கள் பின் தொடருவார்கள். மூன்று ப்ரதக்ஷிணம் ஆனவுடன் மண்டகப்படிதாரரின் தேங்காயை உடைத்து நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை நடக்கும்.

உறியடி மரத்தின் நடுவே கட்டப்பட்டிருக்கும் நடுக்கழியின் ஒரு முனையில் கட்டியிருக்கும் உறியை கீழே இறக்கி, அதை முன் இடையரை முதலில் அடிக்கச் சொல்வார்கள். அதன் பிறகு உறியை அடிக்கும் வைபவம் நடைபெறும்.

உறியடி தினத்தன்று பகவானுக்கு எல்லாத் தரப்பினராலும் சேவை செய்ய சந்தர்ப்பம் அளிக்கப்பட்டுள்ளது. உறியடி அடிக்கும்பொழுது அடிப்பவர்களுக்கு இடையூராக முகத்தில் தண்ணீர் அடிப்பார்கள். இதற்கான தண்ணீர் நிரப்பும் பணி - மின்சார பம்புகள் இல்லாத காலத்தில் - வேதம் படித்தவர்களால் செய்யப்பட்டது. கோவில் எதிரில் உள்ள கிணற்றினுள் ஒரு ஏணியை வைத்து அதில் இரண்டு அல்லது மூன்று நபர்கள் இறங்கி தண்ணீரை எடுத்து மேலே அனுப்பி கிணற்றிற்கு அருகில் உள்ள தொட்டியை நிரப்புவார்கள். தண்ணீர் தொட்டியில் மஞ்சள் பொடி கலந்து முதலில் வேதம் ஓதுபவர் ஒருவர் தண்ணீரை எடுத்து உறியடி அடிப்பவர்மீது இறைத்து ஆரம்பித்து வைத்தவுடன் பிறகு பலர் இப் பணியை தொடர்வார்கள்.

உறியடி அடிப்பது முடிந்தவுடன் ஸ்வாமியை தெற்கு பக்கமாக திருப்பி வழுக்கு மரத்தை பார்க்கும்படி வைப்பார்கள். வழுக்குமரம் ஏறிமுடிந்து அதன் மேலிருக்கும் காணிக்கை முடிச்சு கைப்பற்றியவுடன்

முறுக்கு பிரசாதம் அனைவருக்கும் வழங்கப்படும். பிறகு அந்தமரத்தில் ஏறி காணிக்கையை எடுத்தவர் அந்த மரத்தில் கட்டிய கட்டு ஒன்றை அவிழ்த்து வழுக்குமரம் கீழே இறக்கப்பட்டவுடன் தான் கைப்பற்றிய காணிக்கையை ஸ்வாமியின் முன்னிலையில் உண்டியலில் சேர்த்தபின் தீபாராதனை நடக்கும்.

தீபாராதனை வெற்றி பெற்றவர்க்குதான் காட்டப்படும். பின்பு ஸ்வாமி கோயிலுக்குள் சென்று ஐந்து ப்ரதக்ஷிணம் முடிந்தவுடன் திருவந்திக்காப்பு, கோணங்கி போன்ற சடங்குகள் நடக்கும்.

கோணங்கியின்போது உறியடி கீதம் மட்டும் பாடப்படும். பிறகு 7-வது ப்ரதக்ஷிணம் முடிந்த பின் ஸ்வாமிக்கு முன் மண்டபத்தில் ஏகாந்த சேவை நடக்கும். அதன்பின் தீபாராதனை ஆனவுடன் அர்த்தஜாம பூஜை நடக்கும். சிறிய இடைவேளைக்குபிறகு காலசந்தி ஆனவுடன் ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்து அலங்காரம் செய்யப்படும். பிறகு ஸ்தல பாகவதருக்கு பாகவத சம்பிரதாயத்தின்படி அலங்காரம் செய்து உஞ்சவிருத்திக்கு வீதியில் நடந்துவர தயார் செய்வார்கள்.

உஞ்சவிருத்தி ஆனவுடன் ருக்மிணி கல்யாணம் ஆரம்பித்து முத்துக்குத்தல் முடிந்தவுடன் உலக்கையாடுதல் நடைபெறும். அதற்கு பிறகு கல்யாண கோபாலம் என்ற தரங்கம் சூர்ணிகையுடன் பாடப்பெறும். நைவேத்தியம் தீபாராதனை ஆனவுடன் பக்தர்களுக்கு மஞ்சள் நீர் தெளிக்கப்படும்.

அன்றிரவு நன்றாக அலங்கரிக்கப்பட்ட ஸ்வாமியின் முன்னிலையில் ஆசீர்வாதம் நடைபெறும். மறுநாள் காலை அபிஷேகம் ஆனவுடன் மாலையில் உற்சவ மூர்த்திகளுடன் ஆஞ்சநேய மூர்த்தியையும் நன்கு அலங்காரம் செய்து அவர்கள் முன்னிலையில் பாகவதர்கள் பஜனை பாடி உற்சவத்தை பூர்த்தி செய்வார்கள்.

அதற்கு மறுநாள் காலையில் உறியடி மரத்தை கிராம ஜனங்கள் முன்னிலையில் அவரோஹணம் செய்வார்கள்.

வெண்ணைத்தாழி ஸ்வாமி முன் அலங்காரம்



வெண்ணைத்தாழி ஸ்வாமி பின் அலங்காரம்

## அங்கபிரதக்ஷிண காக்ஷிகள்






## சப்பாணி, இடையர் காக்ஷிகள்






## பூஜா காலங்களும் - புறப்பாடு மஹோத்ஸவ சம்பிரதாயங்களும்

இக்கிராமத்தின் ஸ்ரீ வேங்கடேசபெருமாள் கோயில், ஸ்ரீ மஹா கைலாசநாத ஸ்வாமி கோயில்களில் தினமும் ஐந்துகாலங்களில் முறையே உஷட்காலம், காலசந்தி, உச்சிகாலம், சாயரக்ஷை, அர்த்த ஜாமம் ஆகிய பூஜைகள் நடைபெறுகின்றன. நித்ய பூஜைகள் சரிவர தொடர்ந்து நடப்பதற்காக ஸ்ரீ வேங்கடேசபெருமாள் கோயிலில் ஒரு பட்டாச்சாரியாரும், சிவன் கோயிலில் சிவாச்சாரியாரும் நியமிக்கப்பட்டு கிராமத்திலேயே தங்கி தினசரி பூஜையை குறிப்பிட்ட வேளையில் செய்வதற்கு ஏதுவாக கோவிலுக்கு அருகிலேயே கோவில் நிர்வாகத்திற்கு சொந்தமான வீடு இருவருக்கும் கொடுக்கப்பட்டுள்ளது.

கோயிலை உரிய நேரத்தில் திறந்து வைத்து பிறகு கோவில்மூடும் வரை சேவார்த்திகள் வழிபடுவதற்கு ஏதுவாக இருக்க ஒவ்வொரு கோவில் அர்ச்சகருக்கும், உதவியாளர் ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார். இக்கிராமத்தின் அக்ரஹாரத்தில் வசிக்கும் பட்டாச்சாரியார் குடும்பத்தைத் தவிர மற்ற அந்தணர்கள் எல்லோரும் ஸ்மார்த்தர்கள். ஆனால் எல்லோருக்கும் ஸ்ரீ வேங்கடேச பெருமாள்தான் குல தெய்வம். கோயில் நிர்வாகத்தின் கீழ் வரும் ஸ்ரீ கல்யாண சாஸ்தா (ஐயனார்) கோயிலில் ஒரு கால பூஜை சிவாச்சாரியாரால் தினமும் காலை 10.00 மணி அளவில் செய்யப்பட்டு வருகிறது.

நிர்வாகத்தின் மேற்பார்வையில் ஸ்ரீ பெரமனார் கோயில் பூஜைகளை பூசாரி ஒருவர் செய்து வருகிறார்.

பிரதி வருஷம் ஆடி, தை மாத வெள்ளிக்கிழமைகளில் வரகூர் வாசிகளால் விசேஷ சிறப்பு என்று அழைக்கப்படும் பூஜை பெரம்னார் கோயிலில் பண்டைக்காலம் முதற்கொண்டு நடைபெற்று வருகிறது. அன்றைய தினம் அக்கோயிலிலுள்ள ஐயனாருக்கு சிறப்பு அபிஷேகத்துடன் சந்தனக்காப்பும் அர்ச்சனையும், மற்றும் உள்ள இதர கிராம தேவதைகளுக்கு அர்ச்சனையும் செய்யப்படும். அதைத் தொடர்ந்து ஐயனார் பஜனையும் அதன்பிறகு நூற்றுக்கணக்கான கிராம மக்களுக்கு அன்னதானம் நடைபெற்று வருகிறது.

ஆலய நிர்வாகம் ஐந்து சேத்திகளின் குடும்பத்தினரினால் நடத்தப்பட்டு வருகிறது. வெகுகாலத்திற்கு முன்பே கிராமத்துப் பெரியோர்கள் கோயில்களின் தனித்தன்மையை விடாது பாதுகாக்கவும் பாரம்பரியத்தை தொடர்ந்து நடத்தவும் மண்டகப்படி, உற்சவங்கள் முதலியவைகளை முறைப்படி நடத்தவும் கிராமத்தில் வசித்து வந்த, பண்டைய குடும்பங்களுக்கு பொறுப்பை பகிர்ந்து கொடுதுள்ளனர்.

அதன்படி சுவாமிக்கு குடை பிடித்தல், திருவந்தி காப்பு எடுத்தல், இடையர் தலைவனாக உறியடி உற்சவத்தில் பங்கேற்றல், ருக்மிணி, ராதா மற்றும் ஸீதா கல்யாண உத்ஸவங்களில் முஸலயை வெள்ளி உலக்கை) கையில் எடுத்துகொண்டு நடனமாடுதல்' திவ்யநாம சங்கீர்த்தனம் முடிந்தவுடன் ஐந்து முகதீபத்தை கையில் ஏந்தி நர்த்தனம் புரிதல் முதலியவைகளை செய்ய "ராயர் கூட்டம்" எனப்படும் குடும்பங்கள் ஏற்றுக்கொண்டனர்.

உறியடி உற்சவம், ஸ்ரீ ராம நவமி உற்சவம் மற்றும் விசேஷ தினங்களில் காலையில் பெருமாளுக்கு திருமஞ்சனமும், மாலையில் ஸ்வாமி புறப்பட்டு வருவதற்கும் உண்டான மண்டகப்படிகளை பல குடும்பங்கள் ஏற்றனர்.

ஸ்வாமி புறப்பாட்டில் வாரை கட்டுவதில் இருந்து ஸ்வாமி தூக்குதல் தீவட்டி பிடித்தல், பஜனை செய்தல், வேதம் ஓதுதல், திருவந்தி காப்பு எடுத்தல், கோணங்கி வேஷம் போடுதல் முதலிய ஸ்வாமி கைங்கர்யம் செய்பவர்களுக்கு அவர் செய்யும் கைங்கர்யங்களுக்கு ஏற்றபடி பிரசாதம் தரப்படவேண்டும் என்ற நோக்கில் ஸ்வாமி புறப்பாட்டில் எந்த அளவு பிரஸாதம் செய்யப்பட வேண்டும் என்று அளவையும் நிர்ணயித்தார்கள்.

பழைய கால சம்பிரதாயப்படி ஸ்வாமி புறப்பாடு தினங்களில் கோயில் வீட்டிலேயே தயாரிக்கப்பட்ட நிவேதனங்கள் பகவான் சன்னிதிக்கு கொண்டுவரப்பட்டு அந்த பிரஸாதத்தை இரண்டு பக்தர்கள் பாவாடை தட்டில் பரப்பி, நிவேதனம் ஆனவுடன் பிரஸாதம் அனைவருக்கும் வினியோகிக்கப்படும்.

பெருமாள் கோயிலைப் போன்று சிவன் கோயிலிலும் உற்சவங்களை விடாது நடக்க பொறுப்பு ஏற்று இதைச் சார்ந்தவர்கள் இன்றும் நேரில் வந்தோ அல்லது கோயில் நிர்வாகத்தின் மூலமாகவோ தங்களுக்கு விதிக்கப்பட்ட மண்டகப்படியை பொறுப்புடன் செய்து வருகின்றனர். சிவன் கோயிலில் ஒவ்வொருமாதப் பிறப்பு அன்றும் அனைத்து உத்ஸவமூர்த்திகளுக்கும் அபிஷேகம் அர்ச்சனை நடைபெறுகிறது.

பிரதோஷ காலங்களில் பிரதோஷ நாயகருக்கும், பௌர்ணமியில் ஸ்ரீ அம்பாளுக்கும் சங்கடஹர சதுர்த்தியில் ஸ்ரீ விநாயகருக்கும், கிருத்திகை நக்ஷத்திரத்தில் ஸ்ரீ வள்ளி தெய்வயானை ஸமேத ஸ்ரீ சுப்பிரமணியருக்கும் அபிஷேகம் அர்ச்சனை நடைபெறுவதுடன்

அந்தந்த உற்சவ மூர்த்திகள் கோயிலுக்குள் மும்முறை வலம் வந்தவுடன் அர்ச்சனைக்குப்பிறகு ஸ்வாமிக்கு நிவேதனம் செய்த நைவேத்தியமும் பக்தர்களுக்கு அளிக்கப்படுகிறது.

இதை தவிர ஸ்ரீ பைரவருக்கு காலாஷ்டமியில் அபிஷேகமும், அர்ச்சனையும், நவக்ரஹங்களுக்கு வருடம் இருமுறை அபிஷேகமும், அர்ச்சனையும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு ஆதி சங்கரர் ஜெயந்தி அன்று அபிஷேகமும் அர்ச்சனையும் செய்யப்பட்டு வருகிறது. ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு இரண்டு மாதத்திற்கு ஒருமுறையாக அபிஷேகம், அர்ச்சனை செய்யப்படுகின்றது. முக்கியமாக மார்கழிமாத பௌர்ணமியில் திருவாதிரை அன்று அபிஷேகம், அர்ச்சனையுடன் நன்றாக அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் வீதியுலாவும் நடைபெறுகிறது.

இதை தவிர நவராத்திரி உற்சவம், கந்த சஷ்டி உற்சவம், ஒவ்வொரு வருடமும் கொண்டாடப்பட்டு வருகின்றன. மஹா சிவராத்திரி தினத்தில் மஹன்யாசத்துடன் இரவில் நாலுகால அபிஷேக அர்ச்சனைகளும் வேத விற்பன்னர்களின் வேத கோஷத்துடன் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் கோயில் உற்சவ மூர்த்திகளின் புறப்பாடு கோயிலின் உள்ளேயோ அல்லது வீதி உலாவாக வெளியிலோ இருந்தாலும், பின்வரும் சம்பிரதாயங்கள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

1. சப்த ப்ரதக்ஷணம் (ஏழு பிரதக்ஷிணங்கள்)
2. திருவந்திக்காப்பு
3. கோணங்கி
4. ஏகாந்த சேவை

புறப்பாட்டு காலங்களில் வாரை சாத்திய பிறகு மண்டகப்படி, தீபாராதனை ஆனவுடன் ஸ்ரீமான் தாங்கிகள் வாரைகளை நாற்புரமும் தங்கள் தோள்களை கொடுத்து புறப்பாட்டை ஆரம்பித்தவுடன் பாகவதர்கள் புண்டரீகம் போட்டு "தோடயமங்களம்" பாடத் தொடங்குவர்.

மூலவரையும் சேர்த்து செய்யப்படும் முதல் பெரிய பூரண ப்ரதக்ஷிணத்தில் தோடயமங்களம் பாடி முடிக்கப்படும். வீதியுலா என்றால் ஸ்வாமி முதல் ப்ரதக்ஷிணம் முடிந்தவுடன் வீதியுலா சென்றுவிட்டு கோயிலுக்கு வந்து இரண்டாவது ப்ரதக்ஷிணம் தொடங்குவார். இரண்டுமுதல் ஆறு எண்ணிக்கை வரை ப்ரதக்ஷிணங்கள் கருட மண்டபத்தை சுற்றியே செய்யப்படும். இரண்டாவது ப்ரதக்ஷிணத்தில்

அஷ்டபதி கீதமும், மூன்றாவது ப்ரதக்ஷிணத்தில் ஸ்ரீ நாராயண தீர்த்தர் தரங்கமும், நான்காம் ப்ரதக்ஷிணத்தில் ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள், வேத விற்பன்னர்களால் சொல்லப்படும். 5-வது ப்ரதக்ஷிண ஆரம்பத்தில் உபநிஷத்தும், ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியில் இருந்து ஒரு கத்யமும் "தினகராயுத கோடிதேஜஸினி" எனத்தொடங்கும் பாட்டும், ஸ்ரீ ராம தியான கீதமும், ஸ்ரீ கிருஷ்ண தியான கீதமும், ஸ்ரீ வேங்கடேச தியான கீதமும் பாடப்படும். ஆறாவது ப்ரதக்ஷிணத்தில் சங்கீதம், கீர்வாண கீர்த்தனம், ச்ருங்கார ரசமுள்ள கீர்த்தனம், தமிழ் கீர்த்தனம் என்ற வகையில் பாடப்படும்.

இது முடிந்தவுடன் ஸ்வாமி திருப்பி கருட மண்டபத்தின் நடுவே மூலவர் சன்னிதிக்கு எதிரில் கருடாழ்வாரை நோக்கி கிழக்கு முகமாக நான்கு ஆயக்கால்களில் நிறுத்தி வைக்கப்படுவார்.

பிறகு பாகவதர்கள் பாட திருவந்திக்காப்பு எனப்படும் பகவானுக்கு திருஷ்டி கழிக்கும் தீப நடனம் நடைபெறும். அதற்கு பிறகு நீண்ட தாடியுடன் கூம்பு வடிவ தொப்பியுடன் இருவர் கோணங்கி வேடம் போட்டுக்கொண்டு ஸ்ரீ பகவானின் கல்யாண குணங்களை சொல்லிவிட்டு சிறிது நேரம் கருட மண்டபத்தில் குழுமி இருப்போரை தங்களுடைய கோணங்கி வேஷங்களினால் சந்தோஷப்படுத்துவர் இறுதியில் பாட்டின் மூலமோ, வேத கோஷமாகவோ பகவானின் மஹிமையை கூறுவார்கள்.

பாகவதரின் ஒரு கேள்வியான தாங்கள் எங்கிருந்து எங்கு போகிறீர்கள் என்பதற்கு கோணங்கி வேடம்பூண்ட இருவரும் தங்கள் கைகளை மேலேயிருந்து கீழே காட்டுவார்கள் இதன் உட்பொருள் மேலேயுள்ள பரம் பொருளிலிருந்து மாயையால் கீழேயுள்ள ஜீவர்களாகி பாவ துன்பங்களுக்கு ஆளாகி அதனின்றும் கரையேற வழி தெரியாமல் குருவையடைந்து பகவத் பக்தியை திடமாக செய்துகொண்டு அதன் மூலம் பகவானுடைய திருவருளால் மாயையிலிருந்து விடுபட்டு மீண்டும் பரம்பொருளாகவே ஆகமுடியும் என்பதாகும்.

சம்சார பந்தத்திலுள்ள சிஷ்யர் குருவை ஆச்ரியித்து பிறகு இருவரும் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் அனுக்ரஹத்தினால் மாயையிலிருந்து விடுபட்டு முக்தி அடைவதையே எடுத்துக்காட்டுகிறது கோணங்கியின் தத்துவம்.

பிறகு ஏழாவது ப்ரதக்ஷிணத்தில் நடுவழியே திரும்பி மூலவர் சன்னிதிக்கு எதிரே ஸ்வாமி கொண்டுவரப்படும் பொழுது பாகவதர்கள்

"பவனி வருகிறார்" என்று பாடுவார்கள் பிறகு ஸ்வாமி ஸ்ரீமான் தாங்கிகளால் அர்த்த மண்டபத்திற்குள் கொண்டு வரப்பட்டவுடன் ஏகாந்த சேவை நடக்கும்.

பாகவதர்கள் மற்றும் சில பக்தர்கள் மட்டும் உள்ளே அனுமதிக்கப்பட்டு கதவு தாளிடப்படும் அப்போது பாகவதர்கள் ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியில் இருந்து "விக்ஷேஹம்-கதா கோபால மூர்த்திம்" என்ற தரங்கத்தை பாடுவார்கள். அப்பொழுது ஸ்வாமிக்கு இருபக்கமும் வெண்சாமரங்கள் வீசப்படும். பாட்டும், மற்ற வழிபாடுகளும் முடிந்தவுடன் ஸ்வாமியை அர்த்த மண்டப மேடையில் கிழக்கு முகமாக வைத்து வாரைகள் கலையப்பட்டு கற்பூர ஆரத்தி நடக்கும்.

பாகவத தலைவருக்கு மட்டும் நிர்மால்ய மாலைகள் அணிவித்து ஷடாரி வைத்து துளசி பிரஸாதம் வழங்கப்படும். அர்த்த மண்டபத்தில் உள்ள மற்றவர்களுக்கும் துளசி பிரஸாதம் வழங்கப்படும். திருவந்திக்காப்பின் இறுதியில் நிவேதனம் செய்யப்பட்ட இரண்டு தேங்காய் மூடிகளின் ஒன்றை பட்டாச்சாரியார் பாகவதருக்கும் மற்றொன்றை சீமான் தாங்களில் முன்வாரைகாரரிடமும் கொடுப்பார். தேங்காய் மூடி பிரஸாதம் கொடுக்கப்பட்டவுடன் கதவு திறக்கப்படும்.

பிரஸாதம் வந்தவுடன் நிவேதனம் தூப தீப ஆராதனைகளுடன் பாகவத சம்பிரதாய கீதங்களுடனும் செய்விக்கப்படும் கற்பூர ஆரத்தி காலத்தில் மண்டகப்படிதார் உண்டியலில் காணிக்கை செலுத்த வேண்டும்.

கற்பூர ஆரத்தி முதலில் வேத விற்பன்னர்களுக்கும் பிறகு பாகவதர்களுக்கும் அளிக்கப்படும். பிறகு ஆசீர்வாதம் மந்த்ரபுஷ்பம் ஆனவுடன் முன்பு கூறியதுபோல் பாவாடை தட்டில் உள்ள ப்ரஸாதம் அனைவருக்கும் வழங்கப்படும். ப்ரஸாதம் கொடுத்து முடிந்தவுடன் பட்டாச்சாரியார், பாகவதர்களுக்கு நிர்மால்ய மாலை அணிவித்து ஷடாரி சாதித்து துளசி ப்ரஸாதம் வழங்குவார்.

பிறகு பட்டாச்சாரியார் மண்டகப்படிதாரருக்கு பகவத் பிரஸாதமான நிர்மால்ய மாலைகள், தேங்காய் மூடிகள், பழங்கள் முதலியவை ஆசீர்வாதத்துடன் வழங்குவார். பட்டாச்சாரியாருக்கு ஸ்வர்ணபுஷ்பம் அளித்து மண்டகப்படிதாரர் ப்ரஸாதங்களை ஏற்றுக்கொள்வார்.

கடைசியாக மண்டகப்படிதாரர் ஆலய நிர்வாகக் குழுத் தலைவருக்கு தான்பெற்றுக்கொண்ட பகவானின் ப்ரஸாதங்களில் இருந்து நிர்மால்ய புஷ்பம், தேங்காய்மூடி அளித்து மண்டகப்படியை நல்ல வகையில் நடத்தி கொடுத்ததற்கு நன்றி செலுத்துவார்.

பகவானுக்கு சாத்தப்பட்ட ஆபரணங்களை நிர்வாகக் குழுதலைவரிடம் ஒப்படைத்தபின் கோயில் நிர்வாக அதிகாரிகளுக்கு திருவாபரணமாலை புஷ்பத்தையும் ஒரு தேங்காய்மூடியையும் பட்டாச்சாரியார் அளிப்பார். பிறகு உற்சவர் மூலவர் அருகில் வைக்கப்படுவார். இதன் பின்னர் வழக்கமான அடுத்த கால பூஜை நடைபெறும்.

## வரகூரில் வாழ்ந்த வேத விற்பன்னர்கள்

இக்கிராமத்தின் அக்ரஹாரத்தில்தான் பண்டைகாலத்தில் பிராசீன முறையில் ஆசார அனுஷ்டானத்துடனும், குருமுகமாக பக்தி சிரத்தையுடன் சாஸ்திரங்களையும், வேதங்களையும் படித்தும், அவ்வாறு தாங்கள் கற்றதை பிறருக்கு புகட்டியும் வாழ்ந்த அந்தணர் குடும்பங்கள் பல இருந்தன. குறிப்பாக ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள், ஸ்ரீ கோபால பாகவதர், ஸ்ரீ ஐயாசாமி பாகவதர், ஸ்ரீ சூரிசாமிநாத பாகவதர், ஸ்ரீ முத்துசாமி பாகவதர், ஸ்ரீ அச்சுதகிருஷ்ண சரஸ்வதி, ஸ்ரீ ராமகிருஷ்ண சாஸ்திரிகள், ஸ்ரீ நாராயண சாஸ்திரிகள், ஸ்ரீ அம்பி சாஸ்திரிகள் ஸ்ரீ நாராயண கனபாடிகள், ஸ்ரீ சிதம்பர கனபாடிகள் இவர்களைக் குறிப்பிடலாம்.

தற்காலத்தில் நம்முடன் வாழ்ந்து சிறிது காலத்திற்கு முன் மறைந்த பெரியோர்களில் முக்கியமாக ஸ்ரீ கல்யாணசுந்தர சாஸ்திரிகள், ஸ்ரீ குருசாமி சாஸ்திரிகள், ஸ்ரீ மார்க்கசகாயம் மற்றும் ஸ்ரீ சூரி பாலசுப்பிரமணிய பாகவதர் போன்றவர்கள் வரகூருக்கு பெருமையூட்டிய மகான்களாவர்.

---

*வரகூரைச் சேர்ந்த ஸ்ரீ ஹாலாஸ்ய பாகவதர் ஸ்ரீ சூரி பாலசுப்ரமணிய பாகவதருக்கு முன்பு ஸ்தல பாகவதராக இருந்திருக்கிறார். அவருடைய பெயர் இப் புத்தக முதல் வெளியீட்டில் விடுபட்டுவிட்டது தவறுதலுக்கு வருந்துகிறேன்.*

*- ஆசிரியர்*

# ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் வாழ்க்கை வரலாறு

தொகுத்தவர் : வரகூர் *வை. கிருஷ்ணமூர்த்தி*

வரகூர் ஸ்ரீ வேங்கடேஸப் பெருமாளின் அருட்சக்தியை மக்களுக்கு வெளிப்படுத்தியவர் ஸ்ரீ நாராயண தீர்த்தர் என்ற மஹானாவார். அவருடைய வாழ்க்கை வரலாற்றையும், உறியடி உத்ஸவத்தில் கண்ணனின் இஷ்டமான லீலைகளான உறியடித்தல், வழுக்குமரம் ஏறுதல், இடையர் வேஷம் போன்ற விஷயங்களையும் பற்றி காலம் சென்ற வரகூர் ப்ரஹ்மஸ்ரீ வி.எஸ். குருஸ்வாமி சாஸ்திரிகள் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

ஆச்ரமத்தினாலும், வித்யையினாலும், பரமபூஜ்யாளான ஸ்ரீ நாராயண தீர்த்தருடைய சரித்திரத்தை முதலில் சிந்தனை செய்வோம். இவர் கி.பி.16-வது நூற்றாண்டின் பின் பகுதியிலும், 17-வது நூற்றாண்டின் முன் பகுதியிலும் வாழ்ந்து வந்தவர். தெலுங்கு தேசத்தில் தோன்றிய அந்தணர். ஆறு சாஸ்த்திரங்களையும் கசடறக் கற்றுணர்ந்தவர். ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் இணையற்ற பக்தியுடையவர். முன்வினைப் பயனாய் தோன்றிய வயிற்று நோயால் மிகவும் வருத்தமுற்றார். அத்துன்பத்தை தீர்த்துக் கொள்வதற்கு திவ்ய ஸ்தலங்களை தரிசித்து வர யாத்திரை செய்தார்.

சோழதேசத்தில் யாத்திரை செய்யும் பொழுது, வரகூருக்கு 4 மைல் கிழக்கே இருக்கும் நடுக்காவேரி என்ற கிராமத்தை மாலை நேரத்தில் வந்தடைந்தார். குடமுருட்டி ஆற்றின் கரையில் இருக்கும் விநாயகப் பெருமானைத் தொழுதுவிட்டு அக்கோயிலிலேயே இரவைக் கழித்தார். பின்இரவில் அவருடைய கனவில் ஒரு அந்தணக் கிழவர் தோன்றினார். "ஏ தீர்த்தா! காலையில் விழித்தவுடன் உன் முன் தோன்றும் விலங்கினைத் தொடர்ந்து செல். அது மறைந்த இடத்தில் கண்ணனை பஜிப்பாயாக. உன் தீராத பிணி தீர்ந்துவிடும்" எனக்கூறி மறைந்தார்.

அதிகாலையில் விழித்தவுடன் முன்னே காணப்பட்ட வெண்ணிறமான வராஹத்தை ஸ்ரீ நாராயண தீர்த்தர் பின் தொடர்ந்தார். வரகூர் ஸ்ரீ வேங்கடாசலபதி கோயிலுக்குள் வராஹம் நுழைந்தது. பின்னர் காணவில்லை. தீர்த்தர்கோவிலுக்குள் பிரவேசித்து பகவானைத் தரிசனம் செய்து கொண்டார். தன்னுடைய தீராத பிணி தீர்ந்ததை உணர்ந்தார்.

அன்று முதல் ஸ்ரீ நாராயண தீர்த்தர் பாகவத நூலில் கூறியபடி கண்ணன் கதையை வசனத்திலும், செய்யுளிலும், இசையிலும் சேர்த்து கானம் செய்தார். ஸ்ரீ வேங்கடாசலபதியும் தீர்த்தருக்கு கண்ணனாகத் தரிசனமளித்து அவருடைய பாட்டிற்குத் தக்கபடி கால்சிலங்கை ஒலிக்கும்படி தாளமிட்டு தீர்த்தரை சந்தோஷப் படுத்தி நர்த்தனமாடினார்.

கண்ணன் திரு அவதாரம் முதல் ருக்மணி பிராட்டி திருக்கல்யாணம் வரை பாடிய பின்னரும் மேலும் கதையை பாடத் தொடங்கினார். ஆனால் பகவானுடைய கால் சிலங்கை தாளஒலி நின்றுவிட்டது. அந்தக் குறிப்பால் பகவானுடைய அபிப்பிராயத்தை உணர்ந்து "கிருஷ்ண லீலா தரங்கிணி" என்ற மகா காவ்யத்தை மங்களம் பாடி முடித்து விட்டார். "ஸ்ரீ நாராயண தீர்த்தர் எனப்படும் மலையில் கண்ணனின் கருணை மழை பெய்தது. அம்மலையிலிருந்து கிருஷ்ண லீலா தரங்கிணீ என்ற ஆறு தோன்றி பெருக்கெடுத்து ஓடி பக்தர்களாகிற வயல்களில் பக்திப் பயிர்களை செழிக்கச் செய்யட்டும்" என்று தரங்கிணியின் முடிவில் தீர்த்தர் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஸ்ரீ சிவராமவர்ணி எனப்படும் மகானுக்கு சீடராவர். "தேவ தேவம்க்வேதி ம்ருகயாம:' என்ற கீர்த்தனையில் - வர்ணிதம் சிவராமவர்ணி பதாம்புஜப்ரமரேண" என்று தீர்த்தர் குருநாதாளின் பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார். நாராயண தீர்த்தரின் சிஷ்யர் பிரம்மானந்த ஸரஸ்வதி எனப்படுபவர். அவரும் மிகச் சிறந்த கிருஷ்ண பக்தர். அவர் தானியற்றிய - லகுசந்திரிகை எனப்படும் அத்வைத ஸித்தி வ்யாக்யானத்திலும், 'ரத்னாவளி' எனப்படும் ஸித்தாந்த பிந்து வ்யாக்யானத்திலும்-தன் குரு நாராயண தீர்த்தரையும், தன் குருவின் குருவான சிவராம வர்ணியரையும் ஸ்மரித்து துதிக்கின்றார்.

"ஸ்ரீ நாராயண தீர்த்தரின் திருவடித் தாமரையில் ஸ்மரணமானது சொல்லும் பொருளும் எனக்கு மறக்காமலிருக்கும்படி செய்யட்டும். ஆறு சாஸ்திரங்களின் கரையைக் கண்ட ஸ்ரீ நாராயண தீர்த்தரின் திருவடிகளைத் துணையாகக் கொண்டு சாஸ்திரக் கடலைக் கடந்துவிட்டேன். ஸ்ரீ நாராயண தீர்த்தரின் திருவடித் தாமரையை வாக், மனம், உடல் ஆகிய திருகரணங்களால் எப்பொழுதும் வணங்குகிறேன். எனது குருவான ஸ்ரீ நாராயண தீர்த்தருடைய திருவடி ஸ்மரணமானது வேண்டியவைகளை எனக்குத் தந்தருளட்டும். வேண்டாதவைகளை என்னிடம் வராமல் தவிற்கட்டும். மஹாநுபாவர்களான சிவராமவர்ணிகள் அவர்களே இந்த நூலை இயற்றியவர் ஆவர். நான் அவர் கூறியவற்றை எழுதியவன் மட்டுமே. அத்தகைய குருவையும் வணங்குகிறேன்" என்ற

பொருள் கொண்ட ஐந்து சுலோகங்களை ஸ்ரீ ப்ரும்மானந்த ஸரஸ்வதி எழுதியுள்ளார். ஸ்ரீ ப்ரும்மானந்த ஸரஸ்வதி கி.பி. 17-வது நூற்றாண்டில் வாழ்ந்தவராவர். கிருஷ்ணலீலா தரங்கிணியில் - முதலில் "ஜய ஜய ஸ்வாமின்! ஜய ஜய! திக்கருத கனவிக்ன திமிராவரண தீர நாராயண தீர்த்த கருண" என்று நடுக்காவேரி ஸ்தல மகா கணபதியை துதித்துப் பாடியுள்ளார். தரங்கிணியிலுள்ள "ஹிமகிரிதநயாபத்யம்" என்ற மங்கள சுலோகத்தை இன்றும் ஹரிகதை செய்பவர்கள் முதலில் பாடி வருகின்றனர். "ஜய ஜய வராஹபுர ஸ்ரீ வேங்கடேச" என்று தன்னை ஆட்கொண்ட வரகூர் ஸ்ரீ வேங்கடாசலபதியை ஆரம்பத்திலேயே துதித்துப்பாடியுள்ளார்.

ருக்மணி கல்யாணம்-முத்துக் குத்துதல் முதலிய முறை நாராயண தீர்த்தர் ஆரம்பித்த சம்பிரதாயமாகும். 12-வது தரங்கத்தில் "பைஷிம்யா:" என்ற செய்யுளில் இவ்வாறு வர்ணித்திருக்கிறார்.

"முத்துக்கள் ஸ்ரீ ருக்மணி கையில் இருக்கும்போது சிவந்திருந்தன. (ருக்மணிதேவி திருமணத்தின்போது முத்துக்களால் கண்ணன் சிரஸில் அபிஷேகம் செய்தார்.) அவள் கைகளிலிருந்து விழும்பொழுது வெண்மை நிறமுள்ளதாக இருந்தன. கண்ணன் உடலில் பட்டவுடன் நீல நிறத்தையடைந்தன. அந்த முத்துக்கள் நம்மைக் காப்பாற்றட்டும்." முத்துக்கள் முதலில் சிவந்து, பின்னர் வெண்ணிறமாகி முடிவில் நீல நிறத்தை அடைந்தன. இதன் கருத்து ஸ்ரீ ருக்மணியின் உள்ளங்கள் அனுராகம் எனப்படும் பக்தியால் தூய்மையாக்கப்பட்டு கண்ணனுடன் ஐக்கியமாகிவிட்டது என்பதைக் குறிப்பதாகும்."

உறியடி, வழுக்குமரம் ஏறுதல்-இடையர் வேஷம் முதலிய கண்ணனுக்கு இஷ்டமான லீலைகளை உள் அமைத்து உத்ஸவ முறை ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஏற்படுத்தியதாகும்.

பிரதி வருஷம் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி வரகூரில் கர்ப்போத்ஸவமாகக் கொண்டாடப்படுகிறது. கோகுலாஷ்டமி எனப்படும் கிருஷ்ணன் பிறந்த நாளுக்கு அடுத்த தினத்தில் உறியடி உத்ஸவம் கொண்டாடப்படுகிறது. அன்று காலை வெண்ணைக் குடத்தை அணைத்துக்கொண்டு தவழ்ந்து வருகிற ஸ்ரீ கிருஷ்ண வேஷத்தில் ஸ்ரீ வேங்கடாஜலபதிக்கு அலங்காரம் செய்யப்படுகிறது. இந்த அலங்காரத்துடன் பல்லாக்கில் கிராமப்பிரதக்ஷிணம் செய்வித்து அடியார்கள் மாலைநேரம் கடுங்கால் எனப்படும் சிறிய ஆற்றங்கரையிலுள்ள மண்டபத்தில் அமரச் செய்கிறார்கள். அன்று கோவில், ஆற்றுமண்டபம், திருவீதி எல்லாம் நன்கு அலங்கரிக்கப்பட்டு திருவிழாக் கோலத்துடன் விளங்குகிறது.

ஆற்று மண்டபத்தில் விசேஷ அபிஷேகம் அலங்காரம் ஆகியவைகளைச் செய்து, முன் இரவு பெருமாளை வாத்யகோஷம், வேத கோஷம், பஜனை ஆகியவைகளுடன் திருக்கோயில் பக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் பந்தலுக்கு அழைத்து வருகின்றனர். அவ்வாறு பெருமாள் எழுந்தருளும் போது பின் தொடர்ந்து பிரார்த்தனை விரதம் அனுஷ்டித்து வரும் பக்தர்களையும், அவர்கள் எழுப்பும் 'உறியடியோ! கோவிந்தோ! என்ற கோஷம் காணவும் கேட்கவும் மனதை உருக்குவதாகும். சில பக்தர்கள் ஆற்றில் நீராடி, ஈரமான ஆடைகளுடன் வீதியில் நீண்டு படுத்து அப்படியே உருண்டு (ஸர்வாங்க பிரதக்ஷிணம்) வருவார்கள். சில பக்தர்கள் உட்கார்ந்தபடியே கைகளை ஊன்றி நகர்ந்து (சப்பாணிகள் வேஷத்தில்) பின் தொடர்வார்கள். பின்தொடரும் ஏனைய பெண்கள், சிறுவர்கள் மற்றும் எல்லோரும் 'வெங்கட ரமணு கோவிந்தா! உரியடியோ கோவிந்தா' என்று இடைவிடாமல் உருக்கமாக பகவன்நாமாவைச் சொல்வார்கள்.

பெருமாள் தரிசனத்திற்கு இடையர்களாகத் தங்களை வேஷம் போட்டுக்கொண்டவர்கள். ஒருமித்து ஒரு கோவில் வீட்டில் சேர்ந்து பகவன்நாமாவைச் சொல்லிய வண்ணம் இருப்பார்கள். அவர்கள் கையில் தடியும், இடையில் சலங்கையும் கம்பளியும் போர்த்திக் கொண்டு ஆயர்பாடி கோபர்கள் போல கண்ணனின் தோழர்களாக ஆடிப்பாடுவார்கள். இதற்கு இடை வேஷம் என்ற வேண்டுதல் முறையாகும். இதற்கு முன் நாமக் காணிக்கை கொடுத்து எல்லோரும் நாமம் போட்டுக்கொள்வார்கள்.

இந்த இடையர் தலைவனாக பரம்பரை பாத்யமுள்ள ராயர் குடும்பத்தார் இருக்கிறார்கள். முன் இடையர் என்ற இவர் தலையில் பால் குடம், கம்பளி, துளசி மாலை, இடையில் சலங்கைமணிகள், கையில் தடியுடன், சிரஸில் நீண்ட கம்பளியால் மறைத்துக்கொண்டு, கோவிந்த நாம கோஷத்துடன் பெருமாளை மூன்று முறை வலம் வருவார்கள். அப்படியே அங்கப்பிரதக்ஷிணம் செய்பவர்களும், சப்பாணிகளும் மும்முறை வலம் வருவார்கள். பின்னர் இடையர்தலைவர் பெருமாளுக்குக் காணிக்கை செலுத்துவார். உடனே தீபாராதனை நடைபெறும். இதைக் கண்டுகளிக்க ஆயிரங்கண்கள் வேண்டும்.

பின்னர் இடையர் வேஷம் போட்ட அடியார்களான அந்தணர்கள் அனைவரும் உறியடி மரத்தினருகில் வருவார்கள். திருக்கோயிலின் வாசலில், நீண்டு உயர்ந்த மூன்று மூங்கில் மரங்களை ஒன்று சேர்த்துக் கட்டி, ஆழமான குழி வெட்டி அதில் அந்த உறியடி மரத்தை நாட்டுவார்கள். அம்மரத்தின் நுனியில் கோபுரம் போன்ற அமைப்பில்

மூடி அமைத்து அதை தேர்ச்சீலைகளால் அலங்கரித்திருப்பார்கள். அது வெகுதூரம் தெரியக் கூடியதாக அமைந்து இருக்கும். அம்மரத்தின் நடுவே சுமார் 10 அடி உயரத்தில் குறுக்காக ஒருபுறம் உரிகட்டுவதற்கு மூங்கில் ஒன்று கட்டி தொங்கவிட்டிருப்பார்கள். அந்த மூங்கிலின் ஒருபுறம் சிறிய மூங்கில் துண்டுகளால் ஒரு மிருதங்க வாத்ய ஆகிருதியில் உரிமுடைந்து அதில் கண்ணனுக்கு பிரியமான முறுக்கு சீடை, தட்டை முதலிய பிரஸாதங்களை ஒரு மண்கலயத்தில் வைத்து கட்டி தொங்கவிட்டிருப்பார்கள். மூங்கிலின் மற்றொரு புறத்தில் நீண்டதோர் கயிறு கட்டப்பட்டிருக்கும். அதனை ஒரு சூத்ரதார் கையில் பிடித்திருப்பார். இடையர்கள் உறியை எட்டிப்பிடிக்க முயற்சி செய்வார்கள். சூத்ரதாரர் கைலாகவத்தினால் உறியைக் கிட்டேயும், உயரேயும் பக்கங்களிலும் இழுத்து விடுவார். எட்டிப் பிடிக்க முடியாததால் இடையர்கள் கைத்தடி கொண்டு உறியை நொறுக்குவார்கள். இடையர் சிறுவர்கள் பீச்சாங்குழல் முதலிய ஸாதனங்களால் உறியை அடிப்பவர்கள் முகத்தில் தண்ணீர் அடித்து உறியைப் பிடிக்கும் முயற்சியை கிட்டாமல் செய்வார்கள்.

உறியடிக் காக்ஷியை சொல்லால் வர்ணிப்பதைவிட நேரில் பார்த்து அனுபவிப்பது ரஸமாகவும், பக்தியூட்டுவதுமாகவும் இருக்கும். இரவு 20 நாழிகைக்குள் உறிப்பெட்டி நொறுக்கப்பட்டு அதனுள்ளிருக்கும் பிரஸாதம் வெளிப்படும். கடைசியில் பக்தர்கள் பெட்டியையும் கைப்பற்றி விடுவார்கள். பிரஸாதம் எல்லோராலும் பகிர்ந்து கொள்ளப்படும்.

அதன்பின் வழுக்குமரம் ஏறுதல் - தென்னைமரம் உயரமுள்ள ஒரு வழவழப்பான தேக்குமர ஸ்தம்பம், உறியடி மரத்திற்கு (தெற்கில்) சிறிது தூரத்தில் நாட்டப்பட்டிருக்கும். அந்த ஸ்தம்பத்தை உத்ஸவத்திற்கு முன்பு சிலகாலம் ஜலத்தில் தள்ளி ஊரவைத்துப் பிறகு புளியங்கொட்டைப் பசை இரண்டு மூன்று நூல் கன பரிமாணம் பூசி காயவைத்திருப்பார்கள்.

உறியடியன்று பசைமேல் கடுகையும் விளக்கெண்ணையும் தடவி நிமிர்த்தி வீதியில் நாட்டுவார்கள். வழுக்கமரத்தின் உச்சியில் வட்டமான தோரணங்கள் கட்டி அதில் பெருமாள் பிரஸாதமான முறுக்கும், காணிக்கையும் கட்டி வைத்திருப்பார்கள்.

உறியடி முடிந்ததும் இடையர் வேஷமுள்ள அந்தணர்கள் வழுக்கமரத்தடியில் ஒன்று சேர்வார்கள். சில வலுவானவர்களை அடியில் நிறுத்தி அவர்கள் தோள்மேல் ஏறிநின்று 10, 12, அடிக்கு மேல் 8 முழ

வேஷ்டிகளைக் கொண்டு வழுக்கமரத்தைச் சுற்றி கட்டுக் கட்டி அதில் கால் வைத்து மேல் ஏறத் தொங்கலும் அமைத்திருப்பார்கள்.

இவ்வாறு இரண்டு மூன்று கக்ஷிகளாகப் பிரிந்து கொண்டு தங்களுள் ஒருவரை லக்ஷியத்தை அடைவதற்கு பின்பலமாகச் சென்று போட்டியில் ஏறுவார்கள். இவ்வாறு ஏற முயன்று கொண்டிருப்பவர்களை வேறு இடையர் சிறுவர்கள் தண்ணீர் அடித்து முழுக்காட்டுவார்கள். வழுக்குமரத்திலும் இவர்கள் கட்டுப்போட உபயோகிக்கும் வேஷ்டிகளையும் தண்ணீரால் நனைத்து வழுக்கி விழும்படி செய்வார்கள். வழுக்குதலையும், நீர் அடிப்பதால் ஏற்படுகிற இடையூறுகளையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு லக்ஷியத்தை அடைவதிலேயே வெகு முயற்சியுடன் ஒற்றுமையுடன் செயல்படுவார்கள்.

சிலர் கட்டுகள் நிலையாமல் வழுக்கி கீழே வந்துவிடுவார்கள். சிலர் வேறு பல கட்டுகள் நிலைத்தும் மேல் கட்டுகளில் திணறிக் கொண்டிருப்பார்கள். சுமார் 25 அடிக்கு மேல் ஏறிய இடையர் பேரில் எல்லோரும் சேர்ந்து உத்ஸாக கோஷங்கள் எழுப்பி அவரிடமிருந்து பிரஸாதத்தை அடைய விரும்புவார்கள். போட்டி, இடையூறுகள் எல்லாம் கைவிடப்படும். கடைசி கட்டுப்போட்டு ஏறி நின்று உச்சியை எட்டிப்பிடித்ததும், காணிக்கையை முதலில் எடுத்துக்கொண்டு பிறகு முறுக்குப் பிரஸாதங்களை எடுத்து நாலாபக்கங்களிலும் பக்தர்களுக்கு கிடைக்கும்படி ஐயம் பெற்ற இடையர் வீசுவார். பிறகு ஏறின கட்டுகள் மூலம் இறங்கி வந்து பெருமாளிடம் காணிக்கையைச் செலுத்தினதும் தீபாராதனை நடைபெறும். இதுசமயம் பொழுது விடிந்துவிடும். பெருமாள் பக்தகோஷம், வேதகோஷம், பஜனைகோஷம், வாத்ய கோஷத்துடன் கோவிலுக்குள் எழுந்தருள்வார்.

இந்த உறியடி உற்சவ லீலைகளின் உட்பொருளாக பக்தர்களுடைய மனதில் அரியதோர் மனநிறைவும் நல்ல ஸம்ஸ்காரமும் ஏற்படுகிறது. மனிதன் பேரானந்தம் பெருவதற்கு அக்ஞானம் தடையாக இருக்கிறது. வாழ்க்கையில் பல்வேறு இடர்களால் மனிதன் முன்னேற முடியாமல் எதிர்ப்படுகிறான். இவைகளை சிரவணம், மனனம், நிதித்யாஸனம் ஆகிய ஸாதனங்களால் கிடைத்த ஞானத்தால் அழித்து ஈச்வர அனுக்ரஹத்தினாலும் ஞானிகள் துணைக்கொண்டும் பேரானந்தம் கைகூடுவதையே விளக்குமாம்போல் உத்ஸவம் அமைந்திருக்கிறது.

மூங்கில் உறிப்பெட்டியும், வழுக்கு மரத்தில் பூசப்பட்டிருக்கும் பசை முதலியவைவும் அக்ஞானமாகும். பலவிதமான இடையூறுகளுக்கிடையே

தடிகளால் அடித்தும் கைகளால் அலைத்தும், பெட்டியை உடைப்பதும், வழுக்குமரத்தின் மீது பூசப்பட்ட அக்ஞானமாகிய பாச பந்தங்களைக் களைந்து மேலே ஏறுவதும் ஸ்மரணம் முதலிய ஸாதனங்களால் உண்டான அறிவாகும். வழுக்குமரத்தின் அடியில் ஸ்திரமாக நின்று மேல் ஏறிச்செல்ல உதவி புரிகின்றவர்கள் ஆரூடயோகிகள். ஞானிகள் ஆவார். மேலே செல்பவர்கள் "ஆருருக்ஷி" யோகி எனப்படுவர். இரண்டாவது தரங்கத்தில் "அயிஸகி யசோதே" என்ற சூர்ணிகையில் இக்கருத்தை ஸ்ரீ நாராயண தீர்த்தர் வர்ணித்திருக்கிறார்.

ஏழு எட்டு ஆகிய இரண்டு தரங்களில் கோபிகள் வாயிலாக ஈசாவாஸ்யம் கடம், பிரச்னம், முண்டகம், சாந்தோக்யம் ஆகிய உபநிஷத்துகளின் கருத்துக்களை முறையே. "மிருகயத ராதா மாதவம்'. 'கலயே தேவ மிஹ ஸுகந்தம்', பாவயே ஸகி பாவயே', 'ஸ்ரீ நிலயம் ஸகி ஸ்ரீ நிலயம்', 'அத்வயமகன்டிதமசேஷ ஜகதாதிம்', என்ற கீர்த்தனங்களில் மிக்க அழகாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளார்கள்.

காஞ்சீபுரம் மடம் மஹா பெரியவாள் அவர்களின் பூர்வாஸ்ரம சகோதரரும் மனிதர்கள் நன்னடத்தை, நாணயம், ஒழுக்கம் இவைகளை கடைபிடித்து இயங்கவேண்டுமென அவாகொண்டவருமான, ஸ்ரீ சிவா' என்பவர் தன்னுடைய "ஏணிப்படியில் மாந்தர்கள்" என்ற இலக்கியத்தில் ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி (பக்கம் 375 முதல் 401 வரை) தனக்கே உரிய கோணத்தில் ஆராய்ந்து விளக்கியுள்ளார். இவர் அருளிய ஸ்ரீ நாராயண தீர்த்தரின் வாழ்க்கை வரலாறு நாம் அவரைப் பற்றிகேட்ட பல விஷயங்களிலிருந்து பெரிதும் மாறுபட்டிருப்பதை உணரலாம். **ஸ்ரீ நாராயண தீர்த்தர் வரகூரில் தான் நிர்யாணமடைந்தார்** என்றும், இவரது சமாதிஸ்தலம் வரகூரிலேயே மறைந்து விட்டது என்றும் இவர் திடமாக கூறுகிறார். ஸ்ரீ சிவா அவர்கள் எழுதிய ஸ்ரீ நாராயண தீர்த்தரின் வாழ்க்கை வரலாற்றை பக்தர்களின் கவனத்திற்கு பிரசுரித்துள்ளோம்.

ஆந்தராவிலுள்ள வெல்லத்தூர் என்ற கிராமத்தில் நாராயண தீர்த்த ஸ்வாமிகள் ஜனனமானார். வேதாத்யயனத்தை முடித்து விட்ட இந்த ஆந்திர வாலிபருக்கு பெற்றோர்கள் திருமணம் முடித்து வைத்தனர். தூய்மையை பெற்றிருந்த இவர் மணம் முடிந்தவுடன் சாஸ்திரங்களை பயிலலானார். வாலிபத்திலேயே விவேகத்தை கொண்டிருந்த இவர் காலக்ரமத்தில் பிராம்மணர்களுக்குற்ற தன்மைகளை முற்றிலும் ஏற்றுவிட்டார்.

மேலும் கணவனை தெய்வமாக வழிபடும் ஓர் உத்தமியை இவர் அடைந்திருந்தார். ஒரு சமயத்தில் அருகிலிருந்த ஓர் நதியைக் கடந்து அண்டைய கிராமத்திற்குச் சென்றுவிட்டு திரும்புகையில் நதியின் நீர் மட்டம் சற்று உயர்ந்து விட்டது. அதைக் கவனியாத இவர் நதியில் இறங்கி விட்டார். நதியைக் கடந்து கொண்டிருக்கும் பொழுது திடீரென்று ஆழத்தை உணரவே மேலும் கடக்க முடியாமலும் திரும்பவும் முடியாமலும் தத்தளித்தார். இந்த ஸமயத்தில் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் ப்ராம்மணர்களின் சந்யாச நிலையை நினைவில் ஏற்றார்.

சந்நியாசத்தினால் அதே பிறவியில் மறு ஜென்மம் ஏற்பட்டு விடுவதான ஓர் ப்ராமணம் எப்பொழுது சாஸ்திரத்தில் இருக்கிறதோ அப்பொழுது தானும் நதியிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்ற சந்தேகமற்ற நம்பிக்கையை ஏற்றுவிட்டார். எனவே, அந்த க்ஷணத்திலிருந்து தான் சந்யாசத்தை மேற்கொண்டு விட்டதான சங்கல்பத்தை கொண்டுவிட்டார். இவைகளையெல்லாம் ஒரே கணத்தில் நினைத்து முடித்து விட்டார். உடனே ஆற்று ஜலம் அற்புதமாக தணிந்தது. சுலபமாக அக்கரையை அடைந்த தெய்வஸாது தன்னுடைய சங்கல்பத்தை பத்தினியிடத்தில் எப்படி வெளியிடுவதென்று குழப்பத்தில் ஆழ்ந்தார் தன்னுடைய தர்மபத்தினியை சமாதானப்படுத்துவதில் ஏற்படக்கூடிய சிரமங்களை நினைத்து கலக்கமுற்றார். எனினும் நிகழ்ந்ததை அறிவித்து சமாளிக்க வேண்டியதைத் தவிர வேறு வழியில்லையென்ற முடிவுக்கு வந்த கிருஹஸ்தர் வீட்டையடைந்தார்.'

ஆனால் அவருடைய இத்தகைய மனப்போராட்டங்களுக்கு பகவான் இடம் வைக்கவில்லை. கணவரை கண்ட மாத்திரத்திலேயே அதிர்ச்சியுடன் திடுக்கிட்டாள் பத்தினி. "ஏனம்மா பயப்படுகிறவள் போல் காண்கிறாயே; என்ன நடந்தது ?" என்று கேட்டார். கணவர் மேலே பேச வாயெழும்பாமல் சில கணங்கள் தவித்த பத்தினி, "இது என்ன கோலம்; காஷாயமும், தண்டமும், முண்டனமும் எதற்காக ?" என்று தழதழத்த குரலில் கேட்டதுடன் தாரை தாரையாக கண்ணீர் விடவும் ஆரம்பித்து விட்டாள். பத்தினியின் கண்களுக்கு புலப்பட்ட அதிசயத்தை மேலும் ஆச்சரியத்துடன் உணர்ந்துவிட்ட கணவர், "நான் இன்னும் சந்நியாச கோலத்தை ஏற்கவில்லையே" என்று நிதானமாக பகர்ந்தார்.

இவர் பகர்ந்ததுதான் தாமதம்: பத்தினியின் கண்களுக்கு பழைய கணவராகவே தோற்றமளித்தார் க்ருஹஸ்தர். இந்ததகைய திருப்தியான திருப்பத்தைக் கண்டும் மேலும் கலவரத்தைக் கொண்ட பத்தனி, "இன்னும்........" என்றால் என்ன வென்று வினவினாள்.

நதியில் நேர்ந்த சம்பவத்தை விபரமாகச் கூறி அத்தகைய சந்தர்ப்பத்தில் சந்யாச-சங்கல்பத்தை தான் எடுத்துக் கொள்ளாமல் இருந்திருந்தால் பிழைத்திருக்க முடியாது என்பதை விளக்கி ஸ்திரப்படுத்தினார் தெய்வஸாது.

''உன்னுடைய மாங்கல்யத்தை பலப்படுத்துவதற்காகவே சந்யாச-சங்கல்பத்தை எனக்கு நினைவுபடுத்தி, எனக்கு உயிர்பிச்சை அளித்ததோடில்லாமல் உனக்கும் உணர்த்தி தெளிய வைக்க வேண்டியதின் பொருட்டு அத்தகைய சந்யாச கோலத்தை உனக்கு மட்டும் காட்டினார் நமது ஸ்ரீ கிருஷ்ணன். நீ துக்கத்தைக் கொள்ளாமல் சந்தோஷத்துடன் எனக்கு விடை கொடுக்க வேண்டும்'' என்று ஆறுதலான மொழிகளைப் பகர்ந்தார் தெய்வஸாது.

ஓரளவு அமைதியைப் பெற்ற பத்தினியோ கணவருக்கு மௌன விடையளித்துவிட்டு கணவரைக் கிருஷ்ணரின் ஸ்தானத்திலமர்த்தி பூஜை செய்து காலத்தைக் கழித்து வந்தாள்.

இல்லறத்திலிருந்து அகன்ற நாராயண தீர்த்தர் ஓர் பெரியாரை அணுகி சந்யாசத்தைப் பெற்று தனக்கு கிருஷ்ணனுடைய அருள் ஏற்படும்படி அனுக்ரஹிக்க குருவை வேண்டிக் கொண்டார். சீடனின் பக்திமார்க்கத்தை நல் புரிந்து கொண்ட குரு, காவேரி தீரத்தில் அமைர்ந்திருக்கும் போதேந்திர சுவாமிகளை அணுகும்படி அனுக்ரஹித்து அனுப்பினார்.

குருவினிடமிருந்து விடைபெற்றுப் புறப்பட்ட ஸ்ரீ நாராயண தீர்த்தர் பல பிராந்தியங்களில் க்ஷேத்திராடனங்களை ஏற்று கடைசியாக திருப்பதியை அடைந்தார். வெங்கடேச்வரருடைய சந்நிதியிலேயே சில நாட்கள் வரையில் தங்கியிருக்க மனம் கொண்டுவிட்ட இவர், அனுதினமும் கோவிலைப் பிரதக்ஷணம் செய்து கொண்டே வருவதையும், சந்நிதியில் தூர நின்று தரிசிப்பதையும் தன்னுடைய பணியாக ஏற்று வந்தார்.

இவ்வாறு ஒரு நாள் சந்நிதிக்கு நேராக, வெகு தூரத்தில் சற்று விலகி அடக்கத்துடன் பகவானை ஸ்தோத்தரித்து நின்று கொண்டிருந்தபொழுது, சுமார் பதினோரு வயதுள்ள ஒரு சிறுவன், இனிப்பு பண்டங்கள், வடை முதலியவைகளுடன் இவருக்கெதிரில் காணப்பட்டான். மேலும் இவருடைய கவனத்தைத் திருப்பும் வகையில் இவருக்கு நேராக சற்று தூரத்தில் நின்று பதார்த்தங்களை துரித காலத்தில் பதம் பார்க்க ஆரம்பித்தான். சில வினாடிகளுக்குள்

பண்டங்கள் காலியாகிவிட்டன. பையன் எங்கேயோ ஓடி மறுபடியும் பக்ஷணங்களை மடி நிறைய கொணர்ந்து இவரெதிரில் உட்கார்ந்து தன்னுடைய வேலையைத் துவக்க ஆரம்பித்தான்.

சிறுவர்களுக்குண்டான பக்ஷண ஆசையை இந்த பையனிடத்தில் கண்ட நாராயண தீர்த்தர் ஆனந்தங்கொண்டு அவனையே பார்த்தார். வேலையில் மும்முரத்தைக் காட்டிவந்த சிறுவனோ, இவர் தன்னை கவனிப்பதைக் கண்டு ''என்ன பார்க்கிறாய்? என்னைத் தெரியவில்லையா?" என்று கேட்டான். "எனக்கு தெரியவில்லையே" என்று பதிலளித்தார் தெய்வஸாது. "நான்தான் கோபாலன். உன்னுடன் சேர்ந்து வாசிக்க வில்லையா? மறந்துவிட்டாயா?" என்று கேட்டதுடன் படித்து வந்த காலத்தில் நடந்த சில நிகழ்ச்சிகளையும் அவருக்கு நினைவூட்டினான். இதை ஆச்சரியத்துடன் கேட்ட தெய்வஸாது, "ஆம் உண்மைதான்; ஆனால் கோபாலன் தற்போது பெரியவனாகவல்லவோ இருப்பான் நீ சிறு பையனாக இருக்கிறாயே" என்றார். "ஆம் நான் வளரவில்லை. அப்படியேதான் இருக்கிறேன்" என்று பதிலளித்தான் பையன்.

இவ்வாறு உரையாடிக் கொண்டிருக்கையில் பையன் தின்பண்டங்களை வாய்நிறைய அடைத்து புசித்துக்கொண்டே இருந்தான். இதைப் பார்த்து வந்த தெய்வஸாது பையனுக்கு வயிறு வலிக்குமே என்று தனது மனதுக்குள் அநுதாபத்தைக் கொண்டதுடன் சொல்லவும் மனம் கொண்டு விட்டார். எனவே அன்பும் நயமும் கலந்த பதங்களால், "குழந்தாய் வயிறு வலிக்குமே" என்று இவர் கூறி முடிப்பதற்குள் "என்ன உனக்கு வயிறு வலிக்கிறதா?" என்று கேட்டுவிட்டான் பையன். அவ்வளவுதான்! வயிற்று வலியால் துடிதுடிக்க ஆரம்பித்துவிட்டார் தெய்வஸாது. எனினும் தெய்வஸாதுக்கு சித்தம் தெளிந்துவிட்டது. கிருஷ்ண பரமாத்மாவே தனக்கு அருள்புரிய முன் வந்துவிட்டதை உணரலானார்.

ஆனால் கோபாலனோ "உன் வயிற்றில் என் கையை வைக்கிறேன்: வயிற்றுவலி தீர்ந்துவிடும்" என்று கூறிக்கொண்டே மகானை நோக்கி வந்தார். இவ்வாறு தன்னை அணுகியதும் "கிருஷ்ணா! என் வயிற்றில் கை வைக்காதே: வயிற்றுவலி இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும். உன்னுடைய அருளுக்காகத்தான் காத்திருக்கிறேன்; என் தலையின்மேல் உன் கையை வை" என்று பிரார்த்தித்து வேண்டிக் கொண்டார். கோபாலனும் அருள்புரிந்து மகானின் தலையில் கை வைத்தார். கை வைத்த உடனேயே மறைந்தும் விட்டார். ஆனாலும் வயிற்றுவலி அப்படியே நிலைத்து விட்டது ஸ்ரீ நாராயண தீர்த்தர் முந்திய ஜென்மத்திலும் ஓர் முறை தெய்வ ஸாதுவின் நிலையை முடித்தவராவர்.

ஒரு சில நாட்கள் வரையில் ஸ்ரீ வெங்கடேச்வரருடைய தரிசனத்தில் அமர்ந்து துதித்துவிட்டு, ஸ்ரீ போதேந்திர சுவாமிகளை அடைய வேண்டுமென்ற நோக்கத்துடன் க்ஷேத்திரங்களை தரிசித்துக்கொண்டே சோழநாட்டிலுள்ள கோவிந்தபுரத்தை அடைந்தார். ஆனால் ஸ்ரீ போதேந்திரர் ஜீவன் முக்தியடைந்து பல மாதங்களாகி விட்டதை அறியலானார். எனினும் ஒரு சில் மாதங்கள் வரையில் அந்த மஹானின் அதிஷ்டானத்தில் தங்கிவிட வேண்டுமென்ற ஓர் எண்ணம் உதயமாயிற்று. எனவே அனுதினமும் அவருடைய தியானத்திலமர்ந்து சமாதிக்குப் பக்கத்திலேயே படுக்கும் வழக்கத்தை ஏற்று வந்தார். இவ்வாறு படுத்து வந்த ஒவ்வொரு இரவிலும் சமாதியிலிருந்து வெளிக் கிளம்பிய ஸ்ரீராம நாமாவின் சப்தத்தை செவியுற்ற ஸ்ரீ நாராயண தீர்த்தர் பக்தி மார்க்கத்தின் மகத்வத்தை மேலும் உணரலானார்.

நாராயண தீர்த்தர் அவ்வப்போது ஓரளவு வயிற்று வலியை ஏற்று வந்தாலும்கூட, அதை அவர் பாராட்டாமலிருந்து வந்ததுடன் அதை நிவர்த்தித்துக் கொள்ள பகவானை பிரார்த்திக்கவும் இல்லை. கோவிந்தபுரத்தை விட்டு புறப்பட்ட மகான், காவேரி தீரத்திலுள்ள க்ஷேத்திரங்களை தரிசித்துக் கொண்டே திருவையாறை அடைந்தார். ஒருசில மாதங்கள் வரையில் பெரும்பாலும் திருவையாறைத் தனது வாசஸ்தலமாக அமைத்து சுற்றியுள்ள பிராந்தியங்களில் சஞ்சாரத்தை ஏற்று வந்தார்.

இவ்வாறு ஓர் முன்னிரவில் கண்டியூர், திருக்காட்டுப்பள்ளி சாலையில் நடந்து போய்க்கொண்டிருந்தபோது பகவானிடமிருந்து வலுவில் வாங்கிக் கொண்ட இவரது வயிற்றுவலி சற்று உக்ரஹத்தைக் கொள்ளவே அண்டையிலிருந்த ஓர் பிள்ளையார் கோவிலில் அப்படியே அமர்ந்துவிட்டார். உடனே பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் நித்திரையைக் கொடுத்து கனவில் தோன்றி பின்வருமாறு கூறினார். "நீ காலையில் விழித்துக் கொண்டவுடன் யாரை முதலில் காண்கிறாயோ அவரை பின்பற்றிப் போ; உன்னுடைய வயிற்றுவலி தீர்ந்துவிடும்" என்று அருளினார்.

அருணோதயத்தில் விழித்தெழுந்த மகானோ தன்னெதிரில் ஓர் ஸ்வேத வராஹத்தை கண்டார். வராஹத்தைத் தொடர்வதாவென்ற தயக்கத்தை இவர் கொண்டபொழுது பிள்ளையார் தன்னுடைய ஆள்காட்டி விரலால் சுட்டிக்காட்டி அந்தப் பிராணியையே தொடர உத்தரவிட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வராஹம் மெதுவாக ஓட ஆரம்பித்தது. இவரும் அதை பின்பற்றி ஓடினார். பிறகு வயல் வரப்புகளையெல்லாம் கடந்து அங்குமிங்குமாக ஓடி இவரை மிகவும்

களைப்படையச் செய்துவிட்டது. முடிவாக அண்டையிலிருந்த ஓர் கிராமத்தில் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோவிலுக்குள் நுழைந்தது. இவரும் உள்ளே நுழைந்தார். ஆனால் வராஹத்தை அவ்விடம் காணவில்லை. ஆனால் அதே சமயத்தில் "நான்தான் உன்னை அழைத்துவந்தேன் நீ தேடவேண்டாம்" என்ற அசரீரியைக் கேட்ட மகான் அடங்காத ஆனந்தத்தைக் கொண்டார்.

இந்தச் சம்பவத்திலிருந்து அந்த கிராமம் வரகூர் என்ற பெயரை அடைந்தது. இவருடைய தெய்வீக மேன்மையை உணர்ந்த கிராமத்தினர் இவருக்கு இடமளித்து உபசரித்து வந்தனர். அன்றாடம் இவர் தரிசித்து வந்த ஸ்ரீ வெங்கடேச பெருமாள் இவருக்கு கிருஷ்ணனாகவே காட்சி அளித்து வந்தார்.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் திருப்பதியில் கிருஷ்ணனுடைய அருளை பெற்றதிலிருந்தே கிருஷ்ணனை ஸ்தோத்தரித்து பாடல்களை அமைக்க மனம் கொண்டார். வரகூரில் தன்னுடைய ஸ்திர வாஸத்தை ஏற்றுவிட்ட சில ஆண்டுகளுக்குள் அந்த பாடல்களை முடித்தேற்றினார். ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி ஜீவாத்மாவான ராதை பரமாத்மாவான கிருஷ்ணனை அடையும் தத்வத்தில் ஜெயதேவரால் இயற்றப்பட்ட அஷ்டபதியைப் போல ஸ்ரீ நாராயணதீர்த்தரின் "கிருஷ்ண லீலா தரங்கிணி" போன்ற பாடல்கள் கிருஷ்ணனின் பால்ய லீலைகளை விளக்குவதாகும். இவர் ருக்மிணி கல்யாணத்தைப் பாடியிருப்பதுடன், சிவன், துர்க்கை, விக்னேஸ்வரர் முதலியவர்களின் பேரிலும் ஸ்தோத்திரப் பாடல்களை இயற்றியிருக்கிறார்.

இவர் அன்றாடம் நடத்திய தனது கிருஷ்ண விக்ரஹத்தின் பூஜை முடிவடைந்தவுடன் பூஜை ஸ்தலத்தை மறைத்து திரை போட்டுவிடுவார். இவருக்கு அவகாசம் நேரும் சமயங்களில் தரங்கிணியைக் கானம் செய்து வரும் வழக்கத்தை ஏற்று வந்தார். அத்தகைய சமயங்களில் இவருடைய கானத்திற்கேற்றவாறு கெஜ்ஜை கட்டிய கால்களுடன் நர்த்தனம் செய்யும் ஒலியைத் திரைக்குப் பின்னால் அளித்து வந்தார் கிருஷ்ணன். இத்தகைய பரமானந்தத்தில் ஆழ்ந்து வந்த ஓர் சமயத்தில் பகவான் இவரை அழைத்துக்கொண்டார். வரகூரில் நிர்யாணமடைந்த இவரது சமாதி ஸ்தலம் அக்காலத்திலேயே மறைந்துவிட்டது. ஸ்ரீ கிருஷ்ணர் இவருக்கு பலவிதங்களில் காக்ஷியளித்திருக்கிறார். திருப்பந்துருத்தியில் இவர் ஸமாதியாகவில்லை. பெருமாள் கோவிலுக்கருகில் இந்த தெய்வீக புருஷருக்கு ஓர் நினைவு மண்டபம் நிர்மாணிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும்.

ஸ்ரீ பரணீதரன் அவர்கள் அவருடைய திருத்தலப்பெருமை என்ற தலைப்பில் கட்டுரைகள் எழுதி ஆனந்த விகடன் வார இதழில் வெளியானது. பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு, தெய்வ அருளால் பக்தி காவ்யங்களும், வேதாந்த நூல்களும் இயற்றி, பஜனை, நாட்டியம், நாடகம், இசைத்துறைகளில் அரும் பெரும் சாதனைகளைப் புரிந்த யதீந்திரரான ஸ்ரீ நாராயணதீர்த்த ஸ்வாமிகளைப் பற்றியும், மற்றொரு மகான் குரு கடாக்ஷத்தாலும் தெய்வ அருளாலும் பல சித்திகளை நிகழ்த்திய ஸ்ரீ தீர்த்த நாராயணரைப் பற்றியும் ஸ்ரீ பரணீதரன் எழுதியுள்ளயுள்ளார்.

இப்புவியில் எத்தனையோ அவதூதர்கள், ஞானிகள் பகவானிடம் தங்கள் உள்ளத்தையே பறிகொடுத்து தங்கள் சுயநிலையை அறவே மறந்து இவ் வையகத்தில் கடவுளின் தூதுவர்களாக அவரவர் சுபாவத்திற்கு ஏற்றவாறு தங்களுக்கு இட்ட கடமைகளை நிறைவேற்றிவிட்டு மறைந்து விடுகின்றனர். புகழையும், பெயரையும் சிறிதளவுகூட விரும்பா மனமுடைய அவர்களால் கூறப்பட்ட உண்மைகள், ஹிருதயத்திலிருந்து உணர்ச்சிப் பெருக்கால் பாடப்பட்ட பக்திபாடல்கள் கவிதைகள் எல்லாம் அவர்கள் மறைந்தபின்தான் மக்கள் முழுவதும் அறிகிறார்கள். அவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்களை சாதாரண மனிதபிறவியாகவே கருதி அவர்களிடம் ஒரு ஈடுபாட்டையோ அல்லது அவர்களின் அருளுரைகளை கேட்டு பின்பற்றவோ தயங்கினர். அப்பேர்ப்பட்ட சில மஹான்களின் மறைவு பற்றியும் பிற்கால சந்ததியினர்களுக்கு சந்தேகத்திற்கு இடமின்றி எவ்வித விளக்கமும் கிடைக்கவில்லை. அதனால் தான் ஸ்ரீ நாராயண தீர்த்தரின் மறைந்த இடத்தை குறித்தும் மக்களுக்கு சந்தேகமும், குழப்பமும் ஏற்பட்டுள்ளது. இவ்விஷயத்தில் எழுத்தாளர்களும் தங்கள் கற்பனைக்கு தக்க எழுதி ஒரு குழப்பத்தை உண்டாக்கியிருந்தனர்.

ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகள் திருவையாற்றிற்கு அருகிலுள்ள திருப்பந்துருத்தியில் ஸமாதி அடைந்ததாக அந்த ஸமாதியில் உள்ள அறிவிப்பு பலகை தெரிவிக்கிறது. ஆனால் ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகளை, ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகளாக மாற்றி அவர்தான் வரகூரிலிருந்து இங்குவந்து ஸமாதி அடைந்தாக திரித்துகூறி அந்த சமாதியில் ஸ்ரீ நாராயண தீர்த்தரை வழிபட்டு வருவதுடன் வருடம் தோறும் ஸ்ரீ தீர்த்த நாராயணர் ஸமாதிதினத்தன்று ஸ்ரீ நாராயண தீர்த்தர் இயற்றிய ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியிலிருந்து கீதங்களை பாடி சங்கீத உத்ஸவமாகவும் கொண்டாடி வருகின்றனர்.

இவ்விரு மஹான்களின் பெயர் குழப்பத்தை பற்றி திரு பரணிதரன் அவர்கள் 8-8-1982 ஆனந்த விகடன் வார இதழில் பின்வறுமாறு எழுதியுள்ளார்.

திருக்கண்டியூரையடுத்த மேலத் திருப்பூந்துருத்தியில் இருக்கும் ஸமாதிக் கோயில் 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' பாடிய ஸ்ரீ நாராயண தீர்த்தருடையது என்று கேள்விப்பட்டிருந்த என்னை அங்கு வைக்கப்பட்டிருக்கும் போர்டு சற்றுக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ அனந்த பத்மநாப தீர்த்த நாராயண குருசாமி மடாலயம் என்று அதில் எழுதப்பட்டிருந்தது. நான் நூல்களிலும் கட்டுரைகளிலும் படித்தறிந்தவரையில், நாராயண தீர்த்தருக்கு 'அனந்த பத்மநாபன்' என்ற பெயர் இருந்ததாகவே தெரியவில்லை. 'இப் பெயர் எப்படி வந்தது?' என்று என்னுள் கேள்வி கேட்டுக் கொண்டதோடு நில்லாமல், பலரையும் கேட்கத் தொடங்கினேன். ஒரு நாள் 'ஸ்ரீ அனந்தபத்மநாப நாராயண குரு ஸ்வாமிகள் சரித்திரம்' என்ற ஒரு பழைய நூல் கிடைத்தது. அதற்கு மேல்அட்டை இல்லை. யார் எழுதியது, எப்போது வெளியானது என்ற விவரங்கள் புரியவில்லை. ஆனால், திருப்பூந்துருத்தியில் ஜீவ ஸமாதி கொண்டிருக்கும் மஹான், கங்கா தீரத்தில் உள்ள 'கிரி துர்க்கம்' என்ற கிராமத்தில், கங்காதர சாஸ்திரிகளுக்கும் மங்களாம்பிகா என்றும் மங்கை நல்லாளுக்கும் பிறந்த அனந்தபத்மநாபன் என்று அதில் கூறப்பட்டுள்ளது. அவர் சுவர்ணபுரி என்ற கிராமத்தில் வசித்த சங்கர சாஸ்திரியின் மகள் சுசீலையை மணம் புரிந்து கொண்டார். அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு வயதானதும், அனந்தபத்மநாபன் குடும்பத்தை விட்டு விலகி, முக்தி மார்க்கத்தைத் தேடிச் சென்று விட்டார்.

காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானம் செய்து, ஞான வைராக்கியம் பெறும் பொருட்டு டுண்டி விநாயகரை வழிபட்டார். 'உனக்கு விரைவிலேயே சத்குரு ஒருவர் கிடைப்பார்' என்று கணபதி அருளாசி வழங்கவே, மகிழ்ச்சியடைந்த அனந்தபத்மநாபன், ஜனார்த்தனம் சென்று ஸ்ரீ கிருஷ்ணன் மீது துதிப் பாடல்கள் பாடினார். ஸ்ரீ கிருஷ்ண பகவான் சந்நிதியில், "உனக்கு 'தீர்த்த நாராயணர்' என்ற எனது பெயர் விளங்கப் போகிறது" என்ற அசரீரி கேட்டது.

பின்னர், தீர்த்த நாராயணர் கோகர்ணம், உடுப்பி, சுப்ரமண்யா முதலிய தலங்களுக்குச் சென்றார். 'சுப்ரமண்யாவில் சண்முகர், 'உனக்காகக் காசியில் சிவசித்பரானந்தர்' என்ற சத்குரு காத்திருக்கிறார்.

அவரிடம் உபதேசம் பெற்று சகல ஸித்திகளையும் பெறுவாயாக' என்று அருள்வாக்குக் கூறினார்.

தஞ்சை மாவட்டத்தில், திருக்கோடிக்காவலுக்கு அருகில், காவிரி உத்திரவாகினியாக ஓடும் புண்ணிய பகுதியில் கம்சபுரம் என்னும் கஞ்சனூர் இருக்கிறது. அங்கு தோன்றிய மகான் ஹரதத்த சிவாசாரியார். அவரது சீடர் சிவஞான போதர். அவரது சீடர் சிவசித்பரானந்தர். அவரைத்தான் காசியில் தம் குருவாக ஏற்றுக்கொண்டார் அனந்தபத்மநாபன். தீர்த்த நாராயணர் என்ற தீட்சா நாமம் பெற்றார். 'நீ நாராயண குருவாகப் புகழ் அடைவாய்' என்றும், 'கஞ்சனூரில், சிலாரூபத்தில் இருக்கும் ஹரதத்த சிவாசாரியார் உனக்குப் பிரத்யட்சமாகி, உன்னை அனுக்ரஹிப்பார்' என்றும் வாழ்த்தியனுப்பினார் குரு.

கஞ்சனூருக்கு வரும் வழியில் தீர்த்த நாராயணர், பெறுநோய் உடையவனைக் குணப்படுத்தியும், புலியால் கொல்லப்பட்டவனை உயிர்ப்பித்தும் இன்ன பல அற்புதச் செயல்களைப் புரிந்து கொண்டும் வந்தார். திருவண்ணாமலை குகையில் சிறிது காலம் தங்கியதால் 'குகை நமசிவாயர்' என்ற சிறப்புப் பெயர் பெற்று காஞ்சீபுரம், சிதம்பரம் முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு, கஞ்சனூர் வந்து, காசியில் தமது குரு அருளியவாறே ஹரதத்தரின் தரிசனம் பெற்றார். அவர், "அனந்தபத்மநாபா, நீ ஞானியாகிவிட்டாய். கர்மாவினால் உனக்கு இனி ஆக வேண்டியது ஒன்றுமில்லை ஆனால், உலக மக்களின் நலனுக்காக நீ நற்பணிகள் புரிந்து கொண்டிரு. உன் பணி முடிந்ததும் சச்சிதானந்த ஜோதியுடன் கலந்துவிடலாம்" என்று கூறி மறைந்தார்.

அடுத்து, நாராயண குரு சுவாமிகள் திருவையாற்றை அடுத்து, கொள்ளிடக் கரையிலுள்ள பரசுநர்த்தன தலமான திருமழபாடிக்கு வந்து ஒரு வில்வமரத்தடியில் அமர்ந்தார். திருவையாற்றைச் சேர்ந்த பஞ்சநதம் என்ற அந்தணர் அவருக்குத் தினமும் வெண் பொங்கல் பிரசாதம் தயாரித்து எடுத்து வந்து அளித்த வரலாறும், ஒரு நாள் இவர் சுடுமணலில் நடந்ததால், சுவாமிகள் பாதங்கள் கொப்பளித்திருப்பதைக் கண்டு, 'அபசாரம் அபசாரம்' என்ற கூறியழுததும், குருவின் ஆணைப்படி பிரசாதம் கொண்டு வருவதை அவர் நிறுத்திக்கொண்ட நிகழ்ச்சியும் இந்த நூலில் காணப்படுகிறது.

'இன்னும் 257 நாட்களில் திருப்பூந்துருத்திக்குச் சென்று, அங்கு ஒரு நாள் மறைந்து விடுவேன்' என்று கூறியவர், அவ்வாறே திருப்பூந்துருத்திக்குச் சென்று இறந்த ஆட்டை உயிர்ப்பித்தும்

மரணமடைந்ததாக ஏமாற்றி இவரைச் சோதிக்க வந்த இளைஞரை மரணமடையச் செய்தும், பின்னர் அரசியின் நோயைக் குணப்படுத்தியும் பல அற்புதங்களைச் செய்தார். அதற்காக அரசன், அவரோடு வசித்து வந்த ஆடு நடந்த பரப்பளவு கொண்ட நிலத்தை அவருக்குப் பட்டா செய்து கொடுத்து, சமாதிக் கோயிலும் கட்டிக் கொடுத்தான். மாசி மாதம், சுக்லபட்சம், குருவாரம், அஷ்டமி திதி, கார்த்திகை நட்சத்திரத்தன்று அவர், மந்த்ராலய மகான் ஸ்ரீ ராகவேந்திரர் போன்றே, தமக்காக ஒரு குழியை வெட்டச் சொல்லி, அதில் இறங்கி ஜீவ சமாதியில் ஆழ்ந்தார்.

இதுதான் இந்நூலில் காணப்படும் தீர்த்த நாராயணரின் வாழ்க்கைச் சரித சுருக்கம். இதில் இம்மகான் துளஜாஜி மகாராஜா துணைவியாரின் நோயைக் குணப்படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. அந்த அரசரின் காலம் 1765-1787.

'சிவா' என்பவர் எழுதிய 'தெய்வீகமும் ஆன்மீகமும்' என்ற நூல் 1980-ம் ஆண்டு சென்னை நர்மதா பதிப்பகத்தாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதில் 'தீர்த்த நாராயணர்' என்ற தலைப்பில், கிட்டத்தட்ட இதே சரிதம் வெளியாகியிருக்கிறது. ஆனால், அதில் ஸ்ரீ அனந்தபத்மநாபன், கஞ்சனூர் ஹரதத்த சிவாசாரியாரை நேரில் தரிசித்து உபதேசம் பெற்றதாகவும், அவரே இவருடைய குருவென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இப்புத்தகத்தில் 'நாராயண தீர்த்தர்' என்ற வேறோரு கட்டுரையும் உள்ளது. அதில், இவர் தெலுங்கு தேசத்தில் வெள்ளத்தூர் என்ற கிராமத்தில் பிறந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இவர், திருமணமானவர் என்றும், நதியைக் கடக்கும்போது வெள்ளம் பெருகவே, உயிர் தப்பிக்க மானசீக சந்நியாசம் ஏற்றுக் கொண்டதாகவும், அது மனைவிக்குத் தெரிந்ததும் குடும்பத்தை விட்டு வெளியேறியதாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த ஆசிரியர், 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' பாடிய நாராயண தீர்த்தர் சுவாமிகள் வரகூரிலேயே முக்தியடைந்தார் என்றும், அவரது அதிஷ்டானம் மறைந்து விட்டதென்றும், தீர்த்த நாராயண சுவாமிகள்தான் திருப்பூந்துருத்தியில் ஜீவ சமாதி அடைந்தார் என்றும் உறுதியாகக் கூறுகிறார்.

தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் நாராயண தீர்த்தர் எழுதிய 'பக்தி மீமாம்ச பாஷ்யம்' என்ற ஏட்டுச்சுவடி இருந்ததாகவும், அது தற்போது காணமற்போன பட்டியலில் உள்ளதாகவும் அங்கு பணிபுரியும் அன்பர் குடவாயில் பாலு கூறுகிறார். தஞ்சை

மன்னர்களுடன் தீர்த்தர் தொடர்பு கொண்டிருந்த குறிப்பு ஒன்றும் கிடைக்கவில்லையென்றும் அவர் கூறுகிறார்.

திரு வி.எஸ்.வி. குருசாமி சாஸ்திரிகள் என்ற சமஸ்க்ருத வித்தகர், ஸ்ரீ நாராயண தீர்த்தர், சிவராமவர்ணி என்ற மகானின் சீடர் என்றும், ஒரு கீர்த்தனத்தில் 'வர்ணிதம் சிவராமவர்ணி பதாம்புஜப்ரமணே' என்று தம் குருவின் பெயரை அவர் குறிப்பிட்டிருக்கிறார் என்றும் எழுதியுள்ளார். ஸ்ரீ நாராயண தீர்த்தருக்குப் பிரும்மானந்த சரஸ்வதி என்ற சீடர் இருந்திருக்கிறார். அவர், தாம் இயற்றிய 'லகு சந்திரிகை' என்னும் அத்வைத ஸித்தி வியாக்யானத்திலும் ரத்னாவளி என்ற ஸித்தாந்த பிந்து வ்யாக்யானத்திலும் தம் குருவான நாராயண தீர்த்தரையும், அவரது குருவான சிவராமவர்ணி அவர்களையும் போற்றித் துதி செய்திருக்கிறார் என்றும், அவர் பதினேழாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்றும் குருஸ்வாமி சாஸ்திரிகள் கூறியிருக்கிறார்.

நான் படித்தறிந்த வரையில், இரு மகான்களும் ஒருவரே என்ற முடிவுக்கு வரமுடியவில்லை. ஒருவர், பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு, தெய்வ அருளால் பக்தி காவியங்களும் வேதாந்த நூல்களும் இயற்றி, பஜனை, நாட்டியம், நாடகம், இசைத் துறைகளில் அரும்பெரும் சாதனைகளாகப் புரிந்த யதீந்திரராகவும், மற்றொருவர் குரு கடாட்சத்தாலும் தெய்வ அருளாலும் பல ஸித்திகளைப் பெற்று அற்புதங்கள் நிகழ்த்திய மகா புருஷராகவும் காட்சியளிக்கிறார்கள். பெயர்க் குழப்பத்தினால், இருவர் வாழ்க்கை வரலாறுகளும் பின்னிப் பிணைந்து போய், சரித்திர ஆதாரம் கிடைக்காததால், செவி வழிவந்த செய்திகளைக் கொண்டே அவர்களைப் பற்றி எழுதி வந்திருக்கிறார்கள். என்று எண்ணத் தோன்றுகிறது. 'குழப்பம் தீர்ந்து, தெளிவு பிறந்து, உண்மை விளங்க வேண்டும்' என்று சமாதியில் உறையும் மகானைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

நிற்க, பக்தித் துறையிலும் காவியத் துறையிலும் சரித்திரத் துறையிலும் ஆர்வமுள்ள ஒருவர் இந்தச் சவாலை ஏற்றுக் கொண்டு, நாராயண தீர்த்தர் - 'தீர்த்த நாராயணர்' பெயர்க் குழப்பத்தை சந்தேகத்திற்கிடமின்றித் தீர்க்கும் வகையில் வரகூர், திருப்பூந்துருத்தி தலங்களைப் பற்றி ஆழமாக ஆராய்ந்து, தஞ்சை அரண்மனைக்கும் திருப்பூந்துருத்தி சமாதிக்கும் உள்ள தொடர்பைத் தெளிவுபடுத்தி ஒரு 'தீஸீஸ்' எழுதினால் அது மிகவும் பயனுள்ள அரிய நூலாக அமையும் என்பது உறுதி. ஆராய்ச்சி உள்ளம் கொண்ட இளைஞர்களுக்கு இந்தப் பிரச்சினை ஓர் அரிய கரு என்பதில் ஐயமில்லை.

**பெயரில் குழுப்பமும் அதன் விளக்கமும்**

ஸ்ரீ பரணீதரன் நல்லெண்ணத்துடன் எழுதிய சவாலை ஏற்றுக்கொண்டு "நாராயண தீர்த்தர் - தீர்த்த நாராயணர்" பெயர் குழப்பத்தை சந்தேகத்திற்கு இடமின்றி தீர்க்கும் வரையில் வரகூர் திரு V. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இவ்விஷயத்தில் தன்னுடைய ஆய்வை தொடங்கி பல இடங்களுக்கு சென்று இவ்விஷயமாக பலரை சந்தித்து அறிந்த விவரங்களை கீழே குறிப்பிட்டபடி விளக்கி, சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஸ்ரீ தீர்த்த நாராயணர் தான் திருப்பூந்துருத்தியில் ஸமாதியான மகான் என்று ஊர்ஜிதம் செய்துள்ளார்.

ஆந்திர தேசத்தைச் சார்ந்த கிருஷ்ணபக்த சன்யாசி, வரகூர் வந்து, அவ்வூரில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைத் தரிசித்து அவர் அருளால் தான் துன்புற்ற நோய் நீங்கப்பெற்று, அதன்பொருட்டு பக்திப் பெருக்கால் ஸ்ரீ வேங்கடேச பெருமாளை ஸ்ரீ கிருஷ்ணனாகப் பாவித்து, "ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி" என்ற திவ்ய காவ்யத்தை வரகூர் பெருமாள் சன்னிதியிலேயே இயற்றியவர்" ஸ்ரீ நாராயண தீர்த்தர்தான்" என்பதில் ஐயமில்லை.

திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மடத்திலிருந்து ஸ்ரீ பொன்னம்பல அடிகளாரால் 10-06-97 தேதியிட்ட கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

உ
சிவ சிவ

திருவருள்திரு
தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக
பரமாசாரிய சுவாமிகள்
(ஆதீனகர்த்தர்)

திருவண்ணாமலை ஆதீனம்
குன்றக்குடி 630 206
பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டம்
தமிழ்நாடு
✆ குன்றக்குடி - 04577 - 64267
காரைக்குடி - 04565 - 23215

நாள் : 10.6.97

அன்புடையீர்,

தஞ்சை மாவட்டம் மேலத் திருப்பூந்துருத்தி கிராமத்தில் நமது ஆதீனத்துக்குச் சொந்தமான இடத்தில் உள்ள கோயில் தீர்த்த நாராயண சுவாமி கோயில் என்று நமது ஆதீனப் பதிவேட்டில் இருக்கப் பெற்றுள்ளது.

பொன்னம்பல அடிகளார்

பெறுநர்
திரு. V. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்
எண் 1: ஒன்பதாவது குறுக்குத்தெரு
இந்திரா நகர்
சென்னை - 600 020

“தஞ்சை மாவட்டம் மேலத்திருப்பூந்துருத்தி கிராமத்தில் நமது ஆதீனத்திற்குச் சொந்தமான இடத்தில் உள்ள கோயில் “தீர்த்த நாராயண ஸ்வாமி” கோயில் என்று நமது ஆதீனப் பதிவேடுகளில் குறிக்கப் பெற்றுள்ளது.

திரு பரணீதரன் தன் கட்டுரையில் எழுதியுள்ளபடி திருப்பூந்துருத்தி ஸமாதியில் உள்ள பெயர் பலகையில் “குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ அனந்தபத்மநாப தீர்த்த நாராயண குருசாமி மடலாயம்” என்று எழுதப்பட்டிருந்தது.



ஸ்ரீ அனந்த பத்மநாப தீர்த்த நாராயண
மடாலயம்; திருப்பூந்துருத்தி.

வெளியிடுபவர் ☎ 23721
**R. ராமச்சந்திரன்,**
அசோகா ஏஜன்சிஸ், தஞ்சாவூர் - 9.

பிரதி வருடமும் “ஸ்ரீ தீர்த்த நாராயணருக்கு” ஆராதனை விழா “ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகள் ஆராதனை உத்ஸவ கமிட்டி” (Sree Theertha Narayana Swamigal Aradhana Celebration Committee) யினரால் குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீனத்தின் அனுமதியுடன் நடத்தப் பட்டுவருவதாக குன்னக்குடி ஆதீன அலுவலகத்திலிருந்து தெரிய வருகிறது.



The President and Members of
***Sri Tirtha Narayana Aradhana Celebration Committee* (Regd.)**
Thirupoonthuruthy
Thanjavoor Dt. - 613 103

Cordially invite you to the Inauguration of the

***253rd ARADHANA FESTIVAL***

on Sunday the 21st February 1999, 5.00 p.m.

at Sri Tirtha Narayana Asramam,

Thirupoonthuruthy, Thanjavur Dt.

இம்மாதிரியே, திருப்பூந்துருத்தி ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் டிரஸ்ட்டினால் (பதிவுபெற்றது) ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி இசை விழாவும் நடைபெறுவதாக தெரியவருகிறது.

திருவையாறு ஸ்ரீ கணேச சிரௌதிகள் எழுதி அவர் குமாரர் ஸ்ரீ குருஸ்வாமி சிரௌதிகளால் 1938-ம் வருடம் வெளியிடப்பட்ட 'ஸ்ரீ அனந்தபத்மநாப நாராயண குருஸ்வாமிகள் சரித்திரம்' என்ற புத்தகத்தில் "ஸ்ரீ அனந்த பத்நாப நாராயண குருஸ்வாமிகள்" கஞ்சனூர் ஹரதத்த சிவாச்சார்யாளின் குரு பரம்பரையில் வந்தவர் என்றும் அவர் மேலத்திருப்பூந்துருத்தியில் ஸமாதி அடைந்தார் என்றும் எழுதப்பட்டுள்ளது.

சிவா அவர்கள் எழுதி, நர்மதா பதிப்பகத்தாரால் 1980-ம் வருடம் பிரசுரிக்கப்பட்ட "தெய்வீகமும் ஆன்மீகமும்" என்ற நூலிலும், அதே ஆசிரியர் சிவா அவர்கள் எழுதி நர்மதா பதிப்பகத்தாரால் 1994-ல் பிரசுரிக்கப்பட்ட "ஏணிப்படிகளில் மாந்தர்கள்" என்ற நூலிலும் (1) ஸ்ரீ தீர்த்த நாராயணர் (2) ஸ்ரீ நாராயண தீர்த்தர், இருமகான்களுடைய சரித்திரங்கள் விரிவாக எழுதப்பட்டுள்ளன.

"திருப்பூந்துருத்தியில் ஸமாதி அடைந்தவர். "ஸ்ரீ தீர்த்த நாராயணர்" என்றும், "ஸ்ரீ நாராயண தீர்த்தர்" திருப்பூந்துருத்தியில் ஸமாதியாக வில்லை ஆனால் வரகூரில்தான் ஸமாதியடைந்தார்.

எனவே அவர் திருப்பூந்துருத்தியில் ஸமாதியடைந்ததாகக் கருதப்பட்டு வருவது ஓர் தவறாகும் என்று எழுதப்பட்டுள்ளது. நாராயண தீர்த்தர் - தீர்த்த நாராயணர் என்று பெயர்கள் ஒரேவிதமாகக் காணப்படுவதாலும் இவர்களிருவரும் வெவ்வேறு மகான்கள் என்பதை மக்கள் அறியாததாலும், திருப்பூந்துருத்தியில் தீர்த்த நாராயணர் ஸமாதி என்று ஒன்று இருந்து வருவதாலும், திருப்பூந்துருத்தி ஸமாதியை நாராயண தீர்த்தரின் ஸமாதி என்பதாக நினைத்து பிந்திய காலத்தியவர்கள் ஸ்திரப்படுத்திவிட்டார்கள். வரகூரில் நிர்யாணமடைந்த நாராயண தீர்த்தரின் ஸமாதி ஸ்தலம் அக்காலத்திலேயே மறைந்து விட்டது" (பக்கங்கள் 478, 588, 589)

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பட்டு, குடவாயில் பாலசுப்பிரமணியன் அவர்களால் எழுதப்பட்ட "சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும், ஓவியங்களும்" என்ற புத்தகத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

"புகழ்பெற்ற 'கிருஷ்ண லீலா தரங்கிணி' எனும் சமஸ்க்ருதக் காவியத்தை இயற்றி, சோழமண்டலத்து வரலாற்றில் அழியாப் புகழ் பெற்ற ஸ்ரீ நாராயண தீர்த்தர், தமது இறுதிக் காலத்தை வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் ஆலயத்தில் கழித்தார். வரகூரில் ஜீவஸமாதி அடைந்தார்.

தலைசிறந்த சமஸ்க்ருத நூல்கலைப் படைத்து, இறுதியில் வரகூரில் ஜீவ ஸமாதியடைந்த மஹான் ஸ்ரீ நாராயண தீர்த்தரின் செப்புப் படிமத்தை வரகூரினை அடுத்த ரங்கநாதபுரம் கிராமத்தில் இன்றும் காணலாம்.

கிருஷ்ண லீலா தரங்கிணியின் நாயகனான ஸ்ரீ நாராயண தீர்த்தர் கண்ணனின் திருவடிகளுக்கு கீழாகவே துறவுக்கோல அடியவராக விளங்குவது எத்தனைப் பொருத்தமாக உள்ளது."

திருப்பூந்துருத்தி அனந்தபத்மநாப தீர்த்த நாராயணரையும் - வேறுபட்ட நாராயண தீர்த்தரையும் ஒருவர் எனக்கொண்டு பலர் வரலாறு எழுதினர். (பக்கங்கள் 280, 281, 282)

இதுவரை கிடைக்கப்பெற்ற விவரங்களின் அடிப்படையில், மேலத்திருப்பூந்துருத்தியில் ஸமாதி அடைந்துள்ளவர். "ஸ்ரீ தீர்த்த நாராயணர்"

ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியை இயற்றிய "ஸ்ரீ நாராயண தீர்த்தர்" வேறு ஒரு மஹான் என்ற உண்மை தெளிவாகிறது.

**"ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி"**

ஸ்ரீ நாராயண தீர்த்தர் தூய சம்ஸ்க்ருதத்தில் இயற்றிய காவிய கீதம்தான் "ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி" எனப்படுவது. ஸ்ரீமத் பாகவதத்தில் 10-வது ஸ்கந்தம் 1 முதல் 58 வரையுள்ள அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ள 'ஸ்ரீ கிருஷ்ணனின்' பிறப்பு முதல் அவருடைய பல பால லீலைகள் தான் இக்காவியத்தின் விஷயமாகும் முக்கியமாக "ஸ்ரீ கிருஷ்ணனின்" அவதாரம், பால லீலைகள், கன்றுகள் மற்றும் பசுக்களை மேய்த்தல், கோபியர்களின் வஸ்திராபகரணம், கோவர்த்தன மலையை தூக்குதல், ராஸக்கிரீடை, கம்சன் முதலிய அசுரர்களை அழித்தல், கடலின் நடுவே அமைந்திருந்த துவாரகையை அடைந்து அதில் பிரவேசித்தல், ஸ்ரீ கிருஷ்ணன்- ருக்மிணி விவாஹம், ஜாம்பவதி, சத்யபாமா என எட்டு பட்ட மகிஷிகளின் விவாஹம் ஆகியவைகள் இக்காவியத்தில் விரிவாக பக்தி ரஸத்துடன் பாடப்பட்டுள்ளன.

இக்காவியத்தில் 12 தரங்கங்களும், 153 சிறியதும், பெரியதுமான பாடல்களும், 302 ஸ்லோகங்களும், 31 சூர்ணிகைகளும் உள்ளன. வடமொழியில் "தரங்கிணி" என்ற சொல் அலைகளை குறிக்கும். பக்தி பெருக்கில் பாடப்பட்ட கடல்போன்ற "ஸ்ரீகிருஷ்ணனின் பால லீலைகளே" அலைகளாக உருவெடுத்து பக்தர்களின் உள்ளங்களை மோதி பரவசப்படுத்தி உயர்ந்தநிலைக்கு எடுத்துச்செல்வதால் இக்காவியம் "ஸ்ரீகிருஷ்ண லீலா தரங்கிணி" என்று பெயர் பெற்றதாம்.

குருவாயூர் ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலில் "ஸ்ரீ நாராயண பட்டத்ரி" அருளிய "ஸ்ரீ நாராயணீயம்" பாடல்கள் எவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணனின் ஒப்புதலை பெற்றதோ அதேபோல் "ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியின்" பாடல்களும் வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாளால் அங்கீகரிக்கப்பட்ட பாடல்களாகும்.

ஒவ்வொரு தரங்கத்திலும், அதில் வரும் லீலைகளுடைய பாத்திரங்களின் பெயர்களை கூறியபின் ஸ்லோகம், கீதம், சூர்ணிகை இவற்றால் அந்தந்த லீலைகள் விளக்கப்பட்டுள்ளன. "பக்தர்கள் சபையில், தேர்ச்சிபெற்ற நடிகர்களால் ஸ்ரீ கிருஷ்ணனின் லீலைகள் அபிநயம் செய்யத்தக்கவாறு இக்காவிய கீதம் பாடப்பட்டதாக இக்கீதத்தை நன்கு கற்று அறிந்தவர்கள் கூறுகின்றனர். இக் காவ்ய ஆசிரியரைப் பற்றி ஸ்ரீ பரணீதரன் "திருத்தல பெருமை" 3-வது பாகததில் 80-வது பக்கத்தில் பின்வருமாறு கூறியுள்ளார்.

"அவர் (ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஸ்வாமிகள்) ஆந்திர தேசத்தில் பிறக்கிறார்; வடக்கே போகிறார்; ஆன்மீக ஒளியும், ஞானமும் பெற்று திரும்புகிறார்; ஏழுமலையான் அவரை ஆட்கொள்கிறார்; தெற்கே பயணமாகிறார்.

வரகூர் தெய்வதரிசனம் பெறுகிறார். ஸ்ரீ கிருஷ்ணன் புகழ் பரப்புகிறார், பிறவியின் பயனை எய்துகிறார். அநேகமாக மகான்களின் சரிதங்களை படித்தால் அவர்கள் வடக்கே இருந்து தெற்கு நோக்கியும், தெற்கேயிருந்து வடக்கு நோக்கியும் பயணமாகி பாரத புண்ணிய பூமியை வலம் வந்து தங்களது பக்தியாலும் ஆன்மீக வாழ்க்கையினாலும் தாய் திருநாட்டின் ஒருமைப்பாட்டினை நிலை நாட்டியதை அறியலாம்.

பாரத தர்மங்களின் அடிப்படை நீரோட்டமாக திகழும் ஆழங்காண முடியாத நம் வேதம் கண்ணுக்கு தெரியாத சரஸ்வதி நதியாக கீழே ஓட சிவலீலைகளான கங்கையும், கிருஷ்ண லீலையான யமுனையும் சங்கமமாகும் தெய்வீக திரிவேணி ஸ்தலமாக விளங்குகிறது. நம் புண்ணிய நாடு எந்த சக்தியாலும் அழிக்க முடியாத இந்த ஒற்றுமையின் சின்னங்களாக நம் ஆலயங்கள் விளங்குகின்றன.

அத்தகைய ஆலயங்களில் ஒன்றுதான் "வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் ஆலயம். அத்திருத்தலத்திற்கு பெருமை சேர்த்த மகான்தான் ஸ்ரீ நாராயண தீர்த்தர்".

வரகூர் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் ஆலயத்தின் உள் மண்டபத்தில் உள்ள கல்தூணில் உள்ளது, அவரை வழி மறித்து திசைதிருப்பி நடுக்காவேரிக்கு அனுப்பிவைத்த ஆதிசேஷனின் உருவமும் மண்டபத்தின் மேற்பகுதியில் அழைத்துவந்த ஸ்ரீ வராஹ ஸ்வாமியும் இந்த மண்டபத்தின் நெற்றிக்கண்ணில் உள்ளது.

துவார பாலகருக்கு அருகில் எழுந்தருளிய ஸ்ரீ ஆஞ்சநேய மூர்த்தி ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணிக்கு ஏற்ப ஸ்ரீ வேங்கடேச பெருமாள் நர்த்தனமாடிய போது இவர் தாளம் போட்டு மகிழ்ந்தபடியால் இவரை தாளம்போட்ட ஆஞ்சநேயர் என்று அழைக்கின்றனர்.

**"ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஆராதனை"**

பிரதி வருடம் வரகூரில் ஸ்ரீ நாராயண தீர்த்தருக்கு வைதிக முறைப்படி ஆராதனை நடைபெற்று வருகிறது.

செவி வழியாக வந்த செய்திகளின்படி சுமார் 60-65 ஆண்டுகளுக்கு முன் திருப்பூந்துருத்தியில் இருந்த திரு அரியநாயக முதலியார் என்பவர் வரகூர் வந்து நாராயணதீர்த்தரின் உருவப்படத்தை வாங்கிச் சென்று இரு இடங்களையும் (வரகூர்-திருப்பூந்துருத்தி) சம்பந்தப்படுத்தியதாக தெரிய வருகிறது.

ஸ்ரீ நாராயண தீர்த்தர்க்கு வரகூரிலேயே ஒரு மணிமண்டபம் எழுப்புவது என்றும், அதில் ஒரு பஜனை மண்டபம், ஸேவார்த்திகள் தங்குவதற்கு வசதியாக சில அறைகள், சாப்பாட்டு அறை குளியலறை மற்றும் கழிவறை வசதிகளுடன் கட்டுவதென்றும் வரகூர் கிராம பொதுமக்களால் சில மாதங்களுக்கு முன் தீர்மானம் செய்யப்பட்டுள்ளது. ஸ்ரீ நாராயண தீர்த்தரின் மணிமண்டபம் வரகூர் அக்ரஹாரத்தில் கூடிய விரைவில் கட்டப்பட்டு அம்மஹானின் பெருமையையும், அவர் பாடிய தரங்கிணி பாடல்களை அனைவரும் அறிந்துகொள்ளும்படி செய்யவும் ஸ்ரீ வேங்கடேச பெருமாள் அருள்புரிய வேண்டும்.

---

# 1. ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாத ஸூக்தி: ||

வைகுண்டலோக இதி பூமிதலே ப்ரஸித்த-
ஸ்ரீமத்வராஹபுரநித்யநிவாஸஹ்ருஷ்ட |
ஸ்ரீமத் வராஹபுரதைவத வேங்கடேச
லக்ஷ்மீநிவாஸ பகவன் தவ ஸுப்ரபாதம் ||

கஸ்தூரிகாதிலகமஞ்ஜுலபாலபட்ட-
ஜாஜ்வல்யமானவரகௌஸ்துபசோபிகண்ட | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

ஸ்ரீவத்ஸலக்ஷ்மவிலஸத்ஸுவிசாலவக்ஷ:
ஸ்வர்ணபபீதவஸனுட்யகடிப்ரதேச | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

நாராயணங்கவிலஸத்ரமயாSதிரம்ய ஸ்ரீ
வைநதேயவிஹிதாஞ்ஜலிவந்த்யமான | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

நாராயணக்யயதிபுங்கவரக்ஷணார்த்தம்
ஸ்வேச்சாத்தசுக்லவரஸௌகரதிவ்யமூர்த்தே | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

நாராயணக்யயதிவர்யசிரப்ரவ்ருத்த -
வ்யாத்யாதிஜாதபஹுது:கவிநாசகாரின் | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

நாராயணக்யயதிநிர்மிதக்ருஷ்ணலீலா -
ஸத்க்ரந்தவிச்வவிதிதாத்மமஹாப்ரபாவ | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

ஸ்ரீக்ருஷ்ணபக்திஜனகாத்புதகானலோல
கோபாலபாகவதபக்தவரேஷ்டதாயின் | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

நாராயணக்யகவிநிர்மிதகாவ்யரத்னே
சிக்யோத்ஸவே ஸமுபவர்ணிதபுண்யகீர்த்தே | (ஸ்ரீமத்வராஹபுரதைவத)

# 2. ஸ்ரீ வேங்கடேச சரணாகதி ஸூக்தி: ||

ஸ்ரீராமக்ருஷ்ணமஹநீயதமாவதார -
காலேSகிலை: க்ருதமஹோத்ஸவபக்திபூர்வம் |
ஸ்ரீமத்வராஹபுரபூஷணமந்திரஸ்த
ஸ்ரீவேங்கடேசசரணௌ சரணம் ப்ரபத்யே ||

சிக்யோத்ஸவாக்யஸுதிநே சிபிகாதிரோஹ
வீதிப்ரதக்ஷிணகராஜர பாலக்ருஷ்ண | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

சத்ரேண சாமரயுகேன ச விப்ரவர்யை:
ஸம்ஸேவ்யமான புரத: சுரதீபிகாபி: | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

வேதைச்ச வாத்யநிகரைர்வரபக்தகீதை:
ஸங்குஷ்யமாணஸகலாமலரம்யவ்ருத்த | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

அங்கப்ரதக்ஷிண கரானபி ப்ருஷ்டகந்த்ரூன்
த்வம் வீக்ஷஸே கருண்யா குருஷே ததிஷ்டம்| (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

தண்டைச்ச ஹஸ்தவித்ருதை: த்ருதகோபவேஷா:
தோயாத்ரிதாஸ்தவமுதே-ப்ரஹரந்தி சிக்யம் | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

ஸ்தம்பம் த்ருதம் ச்யுதிகரம் கனதைலலிப்தம்
ஆருஹ்ய கோSபிஸுக்ருதீ தனுதே முதம் தே | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

ப்ரத்யப்தமாஸ்திககணைஸ்தவ சிக்யலீலா -
ஸந்தர்சனார்திபிரஜஸ்ரமுபாஸ்யமான | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

ஸஹ்யாத்ரிஜாவிமலவாரிக்ருதாபிஷேக -
பூஜார்ஹபத்மதுலஸீஸுமபூஜிதாங்க்ரே | (ஸ்ரீமத்வராஹபுரபூஷண)

### 3. ஸ்ரீ வேங்கடேச மங்கள ஸூக்தி : ||

வேதகோப்த்ரே ஹயக்ரீவ
ஹந்த்ரே மத்ஸயஸ்வரூபிணே |
வராஹபுரவாஸாய
வேங்கடேசாய மங்களம் ||

மந்தானமந்தராத்ரீந்த்ர
தாரிணே கூர்மரூபிணே | (வராஹபுரவாஸாய...)

தரோத்தர்த்ரேஹிரண்யாக்ஷ
ஹந்த்ருஸூகரரூபிணே | (வராஹபுரவாஸாய...)

ப்ரஹ்லாதஸூக்திஸந்த்ராத்ரே
நரஸிம்ஹஸ்வரூபிணே | (வராஹபுரவாஸாய...)

மஹாபலிமஹேந்த்ரேஷ்ட
தாத்ரே வாமனரூபிணே | (வராஹபுரவாஸாய...)

பரசுத்வஸ்ததுஷ்டோர்வீ
தரராமஸ்வரூபிணே | (வராஹபுரவாஸாய...)

மர்த்யசிக்ஷாபத்ததீஷ
ராமசந்த்ரஸ்வரூபிணே | (வராஹபுரவாஸாய...)

பலராமஸ்வரூபாய
ஹலினே கலநாசினே | (வராஹபுரவாஸாய...)

அஹிம்ஸா தர்மபாரம்ய
வக்த்ரே புத்தஸ்வரூபிணே | (வராஹபுரவாஸாய...)

கலிதுஷ்டான் கலான் ஹந்தும்
கல்கித்வேன ஜனிஷ்யதே | (வராஹபுரவாஸாய...)

தசாக்ருதிக்ருதே கிருஷ்ண
ரூபிணே பரமாத்மனே | (வராஹபுரவாஸாய...)

ஹரிரேவ கதிர்ஹரிமேவ பஜே
ஹரிணைவ ஸஹாஸ்மி நமோ ஹரயே | (வராஹபுரவாஸாய...)

### 4. ஸ்ரீ வேங்கடேச பலச்ருதி: ||

யே ஸுப்ரபாதசரணாகதிமங்களோக்திம்
ப்ராத: படந்தி மனுஜா: ஹரிபக்தியுக்தா |
தே ப்ராப்நுவந்தி ஸகலானபி பௌமபோகான்
அந்தேபவர்கமபி நித்யஸுகஸ்வரூபம் ||




ஸ்ரீவேங்கடேசப்ரியஸூக்திரத்ன
த்ரயம் குருஸ்வாமிக்ருதம் பவித்ரம் |
படந்து காயந்து ஜபந்து பக்தா:
ஸமீஹிதம் ஸர்வமவாப்நுவந்து ||

---

